ஸ்ரீ

சிருங்கேரி ஜகத்குரு

ஸ்ரீமஹாஸந்நிதானம்

ஸ்ரீ சந்த்ரசேகரபாரதி ஸ்வாமிகள் அவர்கள்

1927-வது வருஷத்தில்

கோயமுத்தூரில் செய்த உபந்யாஸங்களின்

# தொகுதி.

1943

Printed at

THE SCHOLAR PRESS,

PALGHAT

[விலை 12 அணா.

Acc. No: 2009
R65

4-5 2681
2009

ஸ்ரீ

சிருங்கேரி ஜகத்குரு

ஸ்ரீமஹாஸந்நிதானம்

ஸ்ரீ சந்த்ரசேகரபாரதி ஸ்வாமிகள் அவர்கள்

1927-வது வருஷத்தில்

கோயமுத்தூரில் செய்த உபந்யாஸங்களின்

# தொகுதி.




1943

Printed at

THE SCHOLAR PRESS,

PALGHAT

[விலை 12 அணா.

1943-  12 அணா

4-5

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# முன்னுரை.

---

இந்த உபந்யாஸமொழிகள், ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமஹா ஸந்நிதானம், ஸ்ரீ சந்த்ரசேகரபாரதி ஸ்வாமிகள் அவர்கள், ஸேதுயாத்திரயாக, தமிழ்தேசத்தில் ஸவாரிவந்திருந்த பொழுது 1927-ம் வருஷத்தில், கோயமுத்தூர் மஹாஜனங்களின் வேண்டுகோளுக்கிறங்கி, அந்தப் பட்டணத்தில் ஸ்வாமிகள் அவர்களால் லோகக்ஷேமார்த்தம் அருளப் பெற்றவை. அவைகளை ஒரு சிஷ்யன் தன்னால் கூடிய வரை குறிப்புபோட்டுக்கொண்டு அடுத்த தினமே ஸ்ரீமஹா ஸந்நிதானத்தின் மொழிகள் காதிலும், அர்த்தம் மனத்திலும் வாஸம்செய்துகொண்டிருக்கும்பொழுதே திருப்பி எழுதப்பெற்றன. குறிப்பெழுதியவனின் விவேகக்குறைவாலும், கையின் வேகக்குறைவாலும் விஷயங்களும் மேற்கோள்களும் ஏதாவது சில விட்டுப்போய் இருக்கலாம். அப்படி விட்டுப்போயிருந்தால் அவை மிகச்சிலவே என்று நம்பப்படுகிறது. கூடியவரை ஸ்ரீமஹாஸந்நிதானத்தின் வாக்கிலிருந்து உதயமான மொழிகளையே உபயோகப்படுத்தியிருக்கிறது. பிழைகள் பல இதில் புகுந்திருக்கலாம். அவையெல்லாம் குறிப்பெழுதினவனுடையதேயாகும். ஸ்ரீ மஹாஸந்நிதானம் உபந்யாஸ ஆரம்பத்தில் சுருக்கமாய்ச் செய்யும் பிரதிக்ஞையும், அதை அநேக யுக்திகளாலும், மேற்கோள்களாலும், உதாரணங்களாலும் திருடம்

செய்வதும், கடைசியில் வெகு சுருக்கமாய் உபஸம்ஹாரம் செய்யும் அழகும், அங்கு சப்தமின்றி கேட்டானந்தித்த பெருங்கூட்டம் அனுபவிக்க முடிந்ததேயன்றி அதை இங்கு எழுதிக்காட்ட முடிகிறதில்லை. அநேகர்களுக்கு மனதில் தோன்றிய ஸந்தேஹங்கள் உடனுக்குடன் உபந்யாஸபோக்கிலேயே தீர்ந்துபோவதை அநேகர்கள் அனுபவித்தார்கள்.

ஸ்ரீமஹாஸந்நிதானம் கோயமுத்தூரில் செய்த உபந்யாஸங்கள் பன்னிரண்டு. இப்பொழுது ஏற்பட்டிருக்கும் காகிதப்பஞ்சத்தால் ஒரு பாகமே அச்சிடமுடிந்தது. மற்றவை பின்னால்.

பிழைதிருத்தங்களை உடனேயே செய்துகொள்ள வேண்டும். இதில் காணும் பிழைகளைத்தவிற வேறு படிப்பவர்களுக்குப் புலப்படலாம். அவைகளையும் திருத்திக்கொள்ளவேண்டும்.

சிஷ்யன்.





भगवान् श्रीशङ्कराचार्य

THE GITA PRESS, GORAKHPUR. No. 1046.

॥ श्रीगुरुभ्योनमः ॥

# I

பிரபவ-ஹு வைகாசி-மீ 31-உ (ஸோமவாரம்.)

13—6—1927.

பேசுவதென்றால் சாஸ்திரீயமான விஷயங்களைப்பற்றியே பேசவேண்டும். லௌகிக விஷயங்களைப்பற்றிப் பேசுவதில் பிரயோஜனம் ஒன்றுமே இல்லை.

शास्त्रीयेषु व्यवहारेषु यद्यपि बुद्धिपूर्वकारी ।
ना विदित्वात्मनः परलोके सम्बन्धमधिक्रियते ॥

என்றபடி சாஸ்திரங்கள் பரலோகவிஷயங்களைப்பற்றிப் பேசுகின்றன. சிரேயஸ்ஸை சம்பாதிப்பதைப்பற்றிச் சொல்லுகின்றன: நம்முடைய க்ஷேமத்தை நாம் எப்படி ஸம்பாதிக்கலாமென்று போதிக்கின்றன. க்ஷேமத்தை எப்படி ஸம்பாதிப்பது, சிரேயஸ்ஸை எப்படி விருத்திபண்ணுகிறது என்பதைப்பற்றி சாஸ்திரங்களில் என்ன சொல்லி இருக்கிறதென்றால்;—அவைகளை ஸரியாய் பத்ததிப்பிரகாரம் தெரிந்துகொள்ள நமக்கு அதிகாரம் வேண்டும். எல்லோரும் ஒரே மாதிரியான அதிகாரிகள் அல்ல. பல பல வித்யாஸமான அதிகாரிகள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் ஒரே மாதிரி ஸமமாய்ச் சொல்வது ஸாத்யமல்ல. இருந்தாலும் தற்காலம் உபந்யாஸம் செய்வது மார்க்கமாய் இருப்பதால் அதையே அவலம்பித்துச் சொல்லும்போது, எல்லோருக்கும் ஸமமாக ஸாமான்ய வழியாய்த்தான் சொல்ல முடிகிறது. பிரம்மம் என்பது இன்னது என்று நாம் தெரிந்துகொண்டுவிட்டால் நமக்கு சாஸ்திரமும் வேண்டாம், மற்ற

ஒன்றும் வேண்டாம். நமது சுயபுத்தியால் அறிந்துகொள் ளக்கூடுமாய் இருந்தால் சாஸ்திரமே நமக்கு வேண்டிவாராது. அப்படி அறிந்துகொள்ளக்கூடாததாய் இருப்பதால்தான் சாஸ்திரம் வேண்டியிருக்கிறது.

நமக்கு எதைப்பற்றியும் ஒரு அறிவு வேண்டுமானால் "ஆஸ்திக்யம்" வேண்டும். ஆஸ்திக்யம் என்றால் என்ன? 'தெரிந்துகொள்ளவேண்டும்' என்ற ஆசை நமக்கு ஸாமான் யமாய் இருக்கிறது; தெரிந்துகொள்வதென்றால் தெரிந்து கொள்ளவேண்டிய வஸ்து ஒன்று உண்டு என்பது ஸித்தம் ஆகிறது அல்லவா?

அப்படி ஒரு வஸ்து உண்டு என்கின்றவன் "ஆஸ்தி கன்." "अस्ति" 'இருக்கின்றது' என்று சொல்லுகிறவன் ஆஸ்திகன். 'இருக்கிறது' என்ற அர்த்தத்தைக் கொடுக் கிற अस्ति என்ற சப்தத்திலிருந்து உண்டான வார்த்தை 'ஆஸ்திக்கயம்' என்பது. 'இருக்கின்றது' என்று சொல் லுகிறவன் ஆஸ்திகன்.

नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुषा
आस्तीति ब्रुवतोऽन्यत्र कथं तदुपलभ्यते ।
अस्तीत्येवोपलब्धस्य तत्वभावेन चोभयोः
अस्तीत्येवोपलब्धस्य तत्वभावःप्रसीदति ॥

(கட 2, 6, 12, 13)

என்றபடி இருக்கிறதென்றால் எது இருக்கின்றது? நாஸ்தி கன் இல்லை என்று சொல்லுகிறான்; அவன் எதை இல்லை என்று சொல்லுகிறான்? நாஸ்திகனும் சில வஸ்துக்கள் இருக்கின்றன என்று ஒத்துக்கொள்ளுகின்றான். அவன் தேஹமே ஆத்மா, அது ஸ்வதந்திரமுள்ளது என்று சொல்

லுகின்ருன். இதனுல் இவன் ஆஸ்திகன் ஆகிறதில்லே. அதே மாதிரி ஆஸ்திகனும் சில வஸ்துக்கள் இல்லேயென்று சொல்லுகிருன், பிரபஞ்சமே கிடையாது, மித்யை என்கிருன். இதனுல் இவன் நாஸ்திகன் ஆகிவிடுகிறதில்லே. மேலே சொன்ன விஷயங்களால் மட்டும் நாஸ்திக ஆஸ்திக வ்யவஸ்தை ஏற்படுகிறதில்லே. ஆனுல் எதனுல் ஏற்படுகிறதென்ருல், நாஸ்திகன் எதை இல்லே என்கிருனே அதை உண்டென்றும், அவன் இருக்கின்றது என்பதை இல்லே என்றும் சொல்வதால் நாஸ்திக ஆஸ்திக வித்யாஸம் உண்டாகின்றது. நாஸ்திகனுக்குத் தேஹமே ஆத்மா, ஜந்மாந்தரம் இல்லே, ப்ரத்யக்ஷமே பிரமாணம், வேதம் பிரமாணமல்ல, ஈசுவரன் கிடையாது, பரலோகமே இல்லே. ஆஸ்திகனுக்கோ தேஹம் ஆத்மா அல்ல, வேதமே பிரமாணம், ஜந்மாந்தரம் உண்டு, பரலோகம் உண்டு, ஈசுவரன் உண்டு.

இந்த இரண்டு கக்ஷிகளில் எது சரி. இரண்டும் ஸரியாய் இருக்கமுடியாது. ஒன்றுக்கொன்று நேர்விரோதமாய் இருப்பதால் ஏதாவது ஒன்றுதான் ஸரியாய் இருக்கமுடியும். ஆகையால் எது சரி என்று விசாரிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

விசாரத்திற்கு நியாயம் இருந்தாலும், விசாரத்தால் பலன் இல்லாமல் போனுல் விசாரம் நிரர்த்தகமாகிவிடுவதால் இந்த விசாரத்தால் பலன் என்ன என்றும் யோஜிக்கவேண்டியிருக்கிறது.

தற்காலத்தில் நிஷ்பிரயோஜனமான சில விசாரங்கள் வழங்கி வருகின்றன. काकस्य कति वा दन्ताः என்றபடி, காக்கைக்கு எத்தனே பல் என்று காக்கையின் தந்தபரீக்ஷை செய்வதுபோல் நாம் செய்யும் விசாரம் யாதொரு பலனுமற்

றது அல்ல. नास्ति चेत् नास्ति मे हानिः अस्ति चेत् नास्तिको हतः என்றபடி இல்லையென்பது நிச்சயமானால் நமக்கு ஹானி வந்தது ஒன்றுமே இல்லை. இருக்கிறது என்பது நிச்சயமானால் நாஸ்திகன் தொலைந்துபோகிறான். ஒரு இடத்தில் புலி இருக்கிறதென்று நம்பினால் நான் தூர விலகிப்போய் க்ஷேமத்தை அடைகிறேன். நாஸ்திகன் இல்லை என்று நினைத்து கிட்டப் போனால் ஹதமாவது நிச்சயம்தானே. இப்படியே ஒரு இடத்தில் க்ஷேமம் கிடைக்குமென்று நம்பிப் போனால் கிடைத்தாலும் கிடைக்கலாம். நாஸ்திகனோ இல்லை என்று நினைத்து யாதொரு பிரயத்தினமும் செய்யப் போவதில்லை. ஆகையால் ஆஸ்திக்யத்தால் க்ஷேமம் உண்டு.

சிலர் நமது ஆசார்யாள் எப்பொழுது பிறந்தார் என்று விசாரிக்கிறார்கள். இதில் என்ன பிரயோஜனம் ஏற்பட்டு விடும்? அவர் எப்பொழுது ஜனித்தால் என்ன? அதனால் நமக்கு என்ன குணம் ஏற்பட்டுவிடும்? பகவத்பாதர் லோகோபகாரமாய்ச் செய்திருக்கும் கிரந்தங்களை வாசித்து அதனால் வரும் பலனை அனுபவிக்காமல் அவர் எப்பொழுது ஜனித்தார் என்று வீண் விசாரம் செய்யும் மனுஷ்யர்களை என்னென்றுதான் சொல்வது? இப்பொழுது அந்த விஷயத்தை நிஸ்ஸந்தேகமாய் நிர்ணயிக்க முடியுமா? இதுவுமல்லாமல் வேதம் எப்பொழுது உண்டாயிற்று என்று விசாரித்துக்கொண்டு வீண் காலக்ஷேபம் செய்கிறார்கள். வேதத்தில் சொல்லி இருப்பதைத் தெரிந்துகொண்டு பயனை அடையாமல் இந்த வ்யர்த்த காலஹரணம் செய்வதால் என்ன பிரயோஜனம் உண்டாகிவிடும்?

நாம் முன்னே சொன்ன நாஸ்திக ஆஸ்திக மதங்களில் எது சரி என்று நிஷ்கர்ஷை செய்ய ஏற்படுத்தும் விசாரம்,

இப்பேர்ப்பட்ட நிரர்த்தகமான விசாரம் அல்ல. நாஸ்திகம் சரியானுல் நமக்கு மிகவும் சுகமுண்டாகும். தேஹாந்தரம் லோகாந்தரம் இல்லையானுல், நாம் சுகமாக இருந்துவிட்டு ஆஸ்திகர்கள் சொல்லும் கர்மாக்களை ஒன்றும் செய்யாமல் யதேச்சையாய் இருந்துவிடலாமல்லவா? அல்லது ஆஸ்திகம் ஸரியானுல் நாஸ்திகனுக்கும் நமக்கும் நல்லது கிடைக்கின்றது. அவனும் க்ஷேமம் அடையும் மார்க்கத்தைத் தெரிந்து கொண்டு அதை அவலம்பித்து நல்ல கதியை அடைகிருன்.

பார்ப்போம். நாஸ்திகன் சொல்லும் ஜன்மாந்தரம் இல்லை என்பதும், ஈசுவரன் இல்லை என்பதும், வேதம் பிரமாணமல்ல என்பதும் ஸரிதானு என்று யோஜித்துப் பார்ப்போம். ஜன்மாந்தரம் உண்டென்று நிச்சயமாய்ச் சொல்லலாம். இதனுல் என்ன பலன் என்ருல் ஆத்மாவுக்கு பரலோகம் உண்டென்ருல் நல்ல காரியங்கள் செய்து பரலோகத்தில் க்ஷேமத்தை ஸம்பாதிப்பதும், பரலோகக்ஷேமத்திற்கு ஹானியாய் இருக்கிற கெட்ட காரியங்களில் பயந்து அவைகளை நீக்குவதும் உண்டாகுமல்லவா?

தேஹாந்தரம் உண்டென்று வேதத்தில் அநேக இடங்களில் சொல்லி இருக்கிறது.

योनिमन्ये प्रपद्यन्ते शरीरत्वाय देहिनः ।
स्थाणुमन्येऽनुसंयन्ति यथा कर्म यथा श्रुतम् ॥

(कठो 2—5—7)

तद्य इह रमणीयचरणा अभ्याशोह यत्ते रमणीयां योनिमापद्येरन् ब्राह्मणयोनिं वा क्षत्रिययोनिं वैश्ययोनिं वाऽथ य इह कपूयचरणा अभ्याशोह यत्ते कपूयां योनिमापद्येरन् श्वयोनिं वा सूकरयोनिं वा चण्डालयोनिं वा ॥

(छान्दोग्य 5—10—7)

இந்த வேதப்பிரமாணத்தைச் சொன்னால் நாஸ்திகன் ஒத்துக்கொள்ளப்போவதில்லை. ஏன்? அவனுக்கு வேதம் பிரமாணமே அல்ல. ஆகையால் யுக்திகள் சொல்லித்தான் அவனைத்திருத்தமுடியும். ஏனென்றால், நாஸ்திகனும், தேஹாந்தரம் இல்லை, லோகாந்தரம் இல்லை, வேதம் பிரமாணம் அல்ல, என்பதற்கு அவன் ஏதாவது யுக்தி சொல்லித் தானே ஸாதிக்கமுடியும். ஆகையால் அவனுக்கும் ஸம்மதமான யுக்திகளாலேயே சொன்னால்தான் அவன் ஒத்துக்கொள்வான்; தேஹம்தான் ஆத்மா, பரலோகம் இல்லை என்று சொல்வதும் அவனுடைய யுக்திகொண்டுதானே. பரலோகம் கண்ணுக்குத் தெரியாமல் இருப்பதால் யுக்திகளால் தெரிந்துகொள்ளலாம். பசுக்கள் தங்கள் தேஹரக்ஷணார்த்தம் தங்களுக்கு வேண்டியவைகளைச் செய்துகொள்ளுகின்றன, அன்று பிறந்த கன்று ஸ்தன்யபானம் செய்கிறதெப்படி? நாட்டிலாவது மனிதர்கள் ஊட்டப்பழக்குகிறார்கள் என்று சொல்லக்கூடும். அரண்யத்தில் யார் வந்து இந்தக் காரியம் செய்கிறார்கள். ஒருவருமில்லையே! சில ஸமயங்களில் தாய் ஒரு கரையிலும் கன்று மற்றக் கரையிலும் இருந்தால், கன்று தானாகவே நீந்தித் தாயிருக்கும் கரைக்கு வந்துவிடுகின்றது. அது எப்படி? பிறந்தவுடன் நீந்த அதற்கு யார் கற்றுக்கொடுத்தார்கள்? இந்த மாதிரி யுக்திக்காக ஸ்ரீ சங்கர வாக்கியத்தில் கேள்விகள் கேட்கப்பட்டிருக்கின்றன.

कश्चिद्दुःखी स्वजन्मप्रभृति सुखयुतश्चापरः कस्य हेतोः
कस्मादाद्या प्रवृत्तिस्तनुरपि च कुतः किन्नवेत्ति प्रमीतः ।
स्वाभाव्यं हेतु साम्ये सममिति विदितं दीपबीजाङ्कुरादौ
वैषम्यं कर्मजन्यं यदि गदसि जनैः पूर्वमप्यात्मसिद्धिः ॥

இந்தமாதிரி கேள்விகளுக்கு நாஸ்திகன் என்ன பதில் சொல்ல முடியும்? போகட்டும், பசுஜாதிகளை விட்டுவிட்டு மனுஷ்யர்களைப் பார்த்தாலோ அங்கேயும் அப்படித்தானி ருக்கிறது. மனுஷ்யர்களில் சிலர் குருடர், சிலர் செவிடர்; சிலர் புத்திமான்கள், சிலர் மந்தபுத்தியை உடையவர்கள்; சிலருக்கு ஒருவித ருசி, மற்றவர்களுக்கு வேறு விதம்; சிலர் நொண்டி, சிலர் சரியான காத்திரமுடையவர்கள்; சிலர் ரோகிகள், சிலர் தலைவலியும் அறியாதவர்கள். சரீரமே ஆத் மாவானால் இந்த ரோகம் ஏன் வரவேண்டும்? எப்படி வந்த து? மாதாபிதாக்களிடமிருந்து ஜன்யமானதால் அவர்களிட மிருந்து வந்தது என்னலாம். அப்படியானால் அரோகிகளான மாதாபிதாக்களிடத்தில் ரோகிகளான் குழந்தைகளையும், ரோகிகளுக்கு ஸ்வச்சமான சிசுக்கள் இருப்பதையும் கண் டிருக்கிறோமே. அதெப்படி? மேலும், ஒரே மாதாபிதாக் களுக்கு ரோகமுள்ள குழந்தைகளும், திடகாத்திரமுள்ள குழந்தைகளும் இருக்கின்றனவே. இப்படியே புத்திவிசே ஷத்திலும் வித்யாஸம் இருக்கின்றது. ஒருவனுக்கு மஹா மேதை இருக்கிறது; மற்றவன் சுத்த முட்டாள். ஒருவ னுக்கு கணிதத்தில் பிரியம்; மற்றவனுக்கு சாஸ்திரம். ஒருவ னுக்கு எத்தனை தூரம் ஸந்தை சொன்னாலும் வருகிறதில்லை; மற்றவன் ஒரு தட்வை சொன்ன மாத்திரத்தில் பிடித்துக் கொள்ளுகிறான். மேலும், ஒருவனுக்குப் புளிப்பில் பிரியம், வேறு ஒருவனுக்குக் காரம், இன்னொருவனுக்குத் தித்திப்பு. ஆகையால் பிதாமாதிரி புத்திரன் ஆகிறான் என்று சொல்லு வதற்கில்லை. அந்தமாதிரி ஆகிறதில்லை. ஹிரண்யாக்ஷன் பரம விஷ்ணு த்வேஷி. அவன் வயிற்றில் பரம பாகவத னான பிரஹ்லாதன் பிறந்ததாக புராணங்கள் கூறுகின்றன. தர்மாத்மாவான பிதாவுக்கு மற்றவரை ஹிம்ஸித்து அவர்

களின் துக்கத்தைப் பார்த்து ஸந்தோஷித்த அஸமஞ்ஜன் பிறந்தான். அவனுடைய கெட்டதனத்தைப் பார்த்து அவனை ராஜ்ய பட்டாபிஷேகத்திற்கு யோக்யதை இல்லை என்று நீக்கவேண்டிவந்தது. ஆகையால் பிதாமாதிரி புத்திரன் ஆகிறதில்லை என்று ஸித்தமாகிறது. வேறு ஏதாவது காரணம்தான் சொல்லவேண்டிவருகிறது.

காரணவித்தியாஸமில்லாமல் காரியவித்தியாஸம் ஏற்படுகிறதில்லை. ஒரு நிலத்தில் நெல் விதைத்தால், எல்லாம் ஸரியாக நெல்லாகவே முளைக்கும். வேறு ஒன்றும் முளைக்காது. நெல்லும், புளியும், இன்னும் மற்றவையும் சேர்த்து விதைத்தால் அந்தந்த பீஜானுஸாரியாய் அந்தந்த பயிர் உண்டாகின்றது. அப்படியே கருப்பு மண்ணில் செய்த பாண்டம் கருப்பாய் இருக்கின்றது. சிவப்பு மண்ணினால் செய்தது சிவப்பாய் இருக்கின்றது. ஜந்யத்வம் எல்லாருக்கும் ஸமனாய் இருந்தும், காரணம் வித்தியாஸமாய் இருந்ததால்தான் காரியவித்தியாஸமான வெவ்வேறு வர்ணமுள்ள பாண்டங்கள் உண்டாகின்றன. இதற்கு நாஸ்திகன் பதில் சொல்லுவதற்காகிறதில்லை. நம்மவர்கள் இதற்குக் காரணம் "கர்மா" என்று சொல்லுகிறார்கள். உத்தராமசரிதத்தில்

वितरति गुरुः प्राज्ञे विद्यां यथैव तथा जडे
न च तयो ज्ञाने शक्तिः करोत्यपहन्ति वा।
भवति च तयोर्भूयान्भेदः फलं प्रति तद्यथा
प्रभवति शुचिर्बिम्बोद्ग्राहे मणिर्न मृदाञ्चयः ॥

என்றபடி குருவானவர் தன் சிஷ்யர்களுக்கு ஒரேவிதமாய்த்தான் பாடம் சொல்லிக்கொடுக்கிறார். ஆனால் ஒருவன் சரியாய்த்தெரிந்துகொள்ளுகிறான்; மற்றவன் தெரிந்துகொள்ளுகிறதே இல்லை; இன்னொருவன் கொஞ்சம்தான் தெரிந்துகொள்ளுகிறான்; வேறு ஒருவன் தப்பாகத் தெரிந்து

கொள்ளுகிறான். இதற்கு என்ன காரணம்? குரு சொல்லிக் கொடுப்பதில் ஏதாவது வித்தியாஸம் உண்டோ? கிடையாது. உண்டென்றால் மந்தபுத்தியுள்ள மாணுக்கரிடம் பிரேமையோடு இரண்டுமூன்றுதடவை நன்றாகச் சொல்லிக்கொடுக்கிறார். இதுதானே லோகத்தில் ஸத்குருக்களின் வழக்கமாய் இருக்கிறது. அப்படியும் ஏன் பலன் உண்டாகவில்லை?

வஜ்ரமணியை எடுத்துக்கொள்வோம். அதுவும் மண்தான். அதற்கு எப்படி பாளபள்யம் ஏற்பட்டது? சுவரும் மண்தான். அதில் ஏன் இல்லை? வஜ்ரத்தில் ஓர் பாக விசேஷம் இருக்கின்றது. மேலும் அதே வயிரத்திற்கு சாணை பிடித்தால் இன்னும் அதிக ஜ்வலிப்பு உண்டாகின்றது. அது ஸம்ஸ்காரவிசேஷம் தானே! அப்படியே கண்ணாடியை எடுத்துக்கொள்வோம். ஒரே கண்ணாடியில் பலவிதமான பிம்பகிரஹணசக்தி இருக்கின்றது. கண்ணாடியும் மண்தான். சுவரும் மண்தான். சுவற்றில் பிம்பகிரஹணசக்தி யேன் இல்லை? மேலும் கண்ணாடியிலேயே வித்யாஸமிருக்கின்றது. ஒன்று ஸரியாகக்காட்டுகின்றது; மற்றொன்று தலைகீழாகக்காட்டுகின்றது; ஒன்று பூதாகாரமாய்க்காட்டுகின்றது; ஒன்று குறுக்காய்க்காட்டுகின்றது. நேராகக்காட்டும் கண்ணாடிகூட அழுக்கடைந்திருந்தால் சரியாய்த் தெரிகிறதில்லை. இதேமாதிரிதான் புத்திக்கும். புத்தியின் நைர்மல்யத்தால் சிக்கிரகிரஹணசக்தி ஏற்படுகிறதே தவிர வேறல்ல; இப்படியேதான் சுகதுக்காதிகளுக்கும் சொல்லவேண்டியிருக்கிறது.

ஒவ்வொரு புத்திக்கும், முன்னமேயே எப்படி ஸம்ஸ்காரம் ஏற்பட்டிருக்கின்றதோ, அப்படித்தான் இப்பொழுது குணவிசேஷங்கள் தோன்றுகின்றன. ஒரே தாயின் பிள்ளைகளில் ஒருத்தனுக்கு முன் சொன்னதுபோல் புளிப்புப் பிரி

யம், மற்றவனுக்குக்காரம்; ஒருத்தனுக்கு சிவன்மேல் பக்தி, மற்றவனுக்கு விஷ்ணு, வேறு ஒருவனுக்கு தேவி இஷ்டதேவதை. அதனல்தான் பெரியவர்கள் மந்திரோபதேசம் செய்யுங்காலத்தில் ஒருவனுடைய மனப்ரீதியைத் தெரிந்துகொண்டுதான் மந்திரோபதேசம் செய்கிறார்கள். சிஷ்யனுக்கு ருசி இருப்பதால் நல்ல உழைப்பும், அதனுல் மேலான பலனும் அப்பொழுதுதான் கிடைக்கின்றது.

இதற்காகத்தான் வியாஸர் பதினெட்டுபுராணம் எழுதி இருக்கின்றார். ஒன்றில் சிவனை ஸ்தோத்திரம் செய்திருக்கிறார்; மற்றொன்றில் விஷ்ணுவுக்கு பிராபல்யம் கொடுத்திருக்கின்றார்; மற்றொன்றில் சுப்பிரமணிய ஸ்வாமிக்கு. வெவ்வேறு மனிதர் அப்படிச்செய்திருந்தால் ஏதோ காரணம் சொல்லலாம். ஒரே மனிதர் வெவ்வேறாய்ச்சொன்னல் அதன் தாத்பர்யம் வஸ்துபேதமொன்றுமில்லை, புத்தியின் பாகப்படி அவரவர்கள் ஆராதித்து கிருதார்த்தர்கள் ஆகட்டும் என்றுதானே சொல்லக்கூடும். ஒரு வஸ்துவைப்பற்றிச் சொல்லவேண்டுமானல், ஒரு புஸ்தகம் எழுதினல் போதுமானது. பதினெட்டு புஸ்தகங்கள் என்னத்திற்கு? அதிலும் இத்தனை பேதமும் வித்யாஸமும் ஏன்? மேலே நாம் சொன்னது சரியல்லவென்று தோன்றினல் அநர்த்தம்தான் ஸித்திக்கும்.

வியாஸர் பதினெட்டு புராணங்களில் சொல்லியபடி சிவனும் பெரியவன், விஷ்ணுவும் பெரியவன், ஸ்கந்தனும் பெரியவன் என்றால் மகா நாசம் அல்லவா ஏற்பட்டுவிடும்! அநேக யஜமானர்கள் ஒரு இடத்துக்கு இருக்க முடியுமோ? உடனே உலகம் நசித்துப்போய்விடாதா? ஒரு யஜமானன் தான் இருக்க முடியும். இதை வியாஸர் அறியாரா? ஸ்திர

மான ஏற்பாடு ஒன்றுமே இல்லாமல் தாறுமாருய்ப் போய்விடுமன்ருே? பிரம்மா சிருஷ்டிக்கவேண்டுமென்று நினைக்க, ருத்ரன் ஸம்ஹாரம் பண்ணவேணுமென்று நினைத்தால் அப்புறம் எது ஏற்படுவது? சிருஷ்டியா, ஸம்ஹாரமா? இப்படி அவ்யவஸ்தை ஏற்பட்டுவிடுமாதலால் ஒரே யஜமானன்தான் என்பதை ஸர்வ மதங்களும் ஒத்துக்கொண்டுதான் தீரவேண்டும். புராணங்களில் சொல்லப்படுவது ஒரே ஈசுவரனைப்பற்றித்தான். தத்துவத்தில் வித்யாஸமில்லை. ஆனுல் உபாஸகனுடைய புத்திஸம்ஸ்காரத்தின்படி அவனவன் ஆராதித்து ஸத்கதி அடையட்டுமென்றுதான் வியாஸர் பதினெட்டு புராணங்களைச் செய்திருக்கிருர். அதெப்படி என்ருல், தாய் தகப்பன்மார் ஒரு குழந்தையின் அப்தபூர்த்தியன்று, அந்தக் குழந்தைக்குச் ஸகலாபரணங்களையும் போட்டுக் கொண்டாடுகிருர்கள். மற்ருெரு குழந்தைக்கு அப்தபூர்த்தி ஏற்படும்பொழுது ஸகல ஆபரணங்களையும் போட்டும், முன் பிறந்த அந்தக்குழந்தையின் ஆபரணத்தையும் போட்டுக் கொண்டாடுகிருர்கள். இதன் தாத்பர்யம் என்ன? அன்று அந்தக் குழந்தைக்குப் பிராதான்யம்; இன்று இந்தக் குழந்தைக்கு. விச்வாஸம் இரண்டுக்கும் ஒரே மாதிரிதான். அன்றைக்கு அது விசேஷம்; இன்றைக்கு இது; அவ்வளவுதான். வியாஸருக்கு வித்தியாஸமில்லை. நம்ம புத்திக்காக சொன்னது. பூர்வ வாஸனையால் வந்த வித்யாஸம். பூர்வகர்மாவை ஒத்துக்கொண்டால் இதற்கு பதில் சொல்ல முடியும். பூர்வஜன்மத்தில், சிவரூபமாய் ஆராதித்ததால், இந்தக் குழந்தைக்கு சிவன்மேல் பக்தி; மற்றவனுக்கும் அப்படியே விஷ்ணு. இதுதான் சொல்லமுடியும். பூர்வ கர்மாவைப்பற்றி ஸ்ரீ மஹா பாரதத்தில் ஓர் உபாக்யானம் இருக்கிறது. அதாவது ஆணிமாண்

டவ்யர் கதை. அவர் ஒரு பெரிய ரிஷி. ஓர் அரசனிடத்தில் அநேக திருடர்கள் திருடிவிட்டு எங்கேயோ ஓடி ஒளித்துக் கொண்டார்கள். உத்தியோகஸ்தர்கள் தேடிவரும்போது திருடர்களுடன் இந்த ரிஷியையும் பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அரசன் விசாரித்து திருடர்களுடன் இவரையும் சூலாரோஹணம் செய்யும்படி உத்தரவிட்டான். சூலத்திலேயே இருந்துகொண்டு இருந்த ரிஷியைப்பார்த்து ராஜன் மறுபடி தீர விசாரித்து அவர் நிரபராதியென்று தெரிந்துகொண்டு சூலத்திலிருந்து அவரோஹணம் செய் வித்தான். அப்படிச் செய்தும் சூலத்தின் நுனி அவரை விட்டுவிடவேயில்லை. காரணம் தெரியாததால் யோகபலத் தால் யமனை விசாரித்ததில், சிறு குழந்தைப் பிராயத்தில் குச்சியால் ஒரு புழுவைக் குத்தினதற்காக ஏற்பட்ட தண் டனை என்று யமன் சொல்ல, அந்த ஜீவஹிம்ஸை எப்பொ ழுது ஏற்பட்டது என்று வினவி, எட்டு வயதில் ஏற்பட்டது என்று தெரிந்துகொண்டு, உடனே யமனைப்பார்த்து, இது நல்லது, இது கெட்டது என்று பகுத்தறிய சக்தி இல்லாதி ருந்த காலத்தில் செய்த கர்மாவுக்காக இந்த தண்டனை தகா ததால் யமனைச் சூத்திரயோனியில் ஜனிக்கும்படி சாபம் கொடுத்ததாகக் கண்டிருக்கிறது. இப்படி இருக்கும்போது பிறவிக் குருடனையும், பிறவிச் செவிடனையும் ஏன் செய்தார் கடவுள்? எட்டு வயது வரையிலும் செய்த கர்மத்திற்கே பலன் இல்லையானால் பிறவிக் குருடு இத்யாதிகள் எப்படி வந்தன? ஈசுவரன் செய்தான் செய்தான் என்றால் வைஷம் யம் (பக்ஷபாதம்), நைர்க்ருண்யம் (தயையின்மை) என்ற இரண்டு தோஷங்கள் ஈசுவரனுக்கு வந்துவிடுகின்றன.

தோஷத்தோடுகூடியவன் ஈசுவரன் ஆக முடியுமா? தோஷரஹிதனாக அல்லவோ இருக்கவேண்டும். அதுவு

மன்றி பக்ஷபாததோஷம் வாலாமோ? லோகத்திற்கு ஹித மாக அநேக சாஸ்திரங்களை உண்டுபண்ணின ஈசுவரன் துக்கத்தை சில ஜனங்களுக்கு வேணுமென்றே கொடுத்தான் என்பது ஒத்துக்கொள்ள முடிகிறதில்லை.

வேதசாஸ்திரங்கள் ஈசுவரனுல் செய்யப்பட்டவை. अनन्ता वै वेदा: என்றிருக்கிறபடியால், ஒரு சாகையையே தெரிந்துகொள்ள முடியாத நாமா, வேதசாஸ்திரங்களைச் செய்ய முடியும்? சாஸ்திரகர்த்தா ஈசன் என்பதில் எள்ளளவும் சந்தேஹமில்லை. ஸகலருக்கும் சுகத்தைக்கொடுத்து துக்கத்தை நீக்க ஸித்தனய் இருக்கிற ஈசனே, தானே இஷ்டப்பட்டு ஒருவனுக்கு அந்தத்துவாதி (குருட்டுத்தன்மை முதலிய) கஷ்டத்தையும், மற்றவருக்கு சுகத்தையும் கொடுத்தான் என்று சொல்வது பொருந்தாது. நம்முடைய கர்மத்தை அபேக்ஷித்துச்செய்கிருனே தவிர தானுகச்செய்கிறதில்லை.

ஒரு அரசனை எடுத்துக்கொள்வோம். அவன் தனது பிரஜைகளுக்கு, தன்னிஷ்டப்படி சுகதுக்கங்களைக்கொடுத்தால், அவனை பக்ஷபாதன் என்றுதானே சொல்லவேண்டும். ஒருவனுடைய ஸேவை முதலியவைகளை உத்தேசித்து ஸம்மானம் செய்தாலும், மற்றவனுடைய குற்றங்களை உத்தேசித்து தண்டித்தாலும் ராஜனுக்குத் தோஷம் ஸம்பவிக்காது. அதுபோல் ஈசனும் கர்மானுஸாரமாய் சுகதுக்கங்களைக் கொடுக்கின்றுன். ஒரே மனிதன் சிலகாலம் ஸம்மானமும், பின் அவனுடைய நடத்தையின் தோஷத்தால் ராஜ கிருபாநாசமும் அடைவதுபோல், சுகிருத துஷ்கிருத பலனுக ஜாத்யந்தனய்(பிறவிக்குருடனுய்) இல்லாவிட்டாலும், பிறந்த பிறகு சில துஷ்கிருத்யத்தால் கண் போய்விடுவதையும் பார்த்திருக்கிறேம். இப்படியே மற்றவைகளுக்கும் ஊஹித்

துக்கொள்ளவேண்டும். பரமதயாளுவாய் ஜீவோத்தாரம் செய்யக் காத்துக்கொண்டிருக்கும் கருணாமூர்த்திக்கு நைக்ருண்யதோஷம் கிடைப்பதும் இதுபோல் நியாயமல்ல.

ஆகையால் ஒரே ஈசனும் வேண்டும், கர்மமும் வேண்டும். ஆகலால் ஜன்மாந்தரம் நிச்சயமாகிறது. ஜன்மாந்தரம் நிச்சயமானல் ஆத்மா நித்யம் என்பது நிச்சயமாய் ஏற்படுகிறது. மேலும், முதல்முதல் ஒவ்வொரு ஜீவனும் செய்யும் காரியம் எப்படி வந்தது. कस्मादाद्या प्रवृत्तिः யாரும் நிஷ்பலமான காரியத்தைச்செய்யமாட்டார்கள் அல்லவா. प्रयोजनमनुद्दिश्य न मन्दोपि प्रवर्तते என்றபடி ஒரு பிரயோஜனத்தை உத்தேசித்துத்தானே உலகத்தில் ஸகல பிரவிருத்திகளும் ஏற்பட்டிருக்கின்றன. இந்த இஷ்டஸாதனதாஞானம் எப்படி வந்தது? இந்த ஞானத்திற்கு மூன்றுவேண்டும். जानाति, इच्छति प्रवर्तते என்றபடி முதலில் அறிகிருன், அப்புறம் பிரியப்படுகிருன், பிறகு பிரயத்தனப்பட்டு அடைகிருன்.

கடையில் ஒரு பதார்த்தம் வைத்து இருக்கிருன் என்று வைத்துக்கொள்வோம். அந்த பதார்த்தம் இருக்கிறதென்று முதலில் அறிந்துகொள்ளவேண்டும். அறிந்துகொள்ளாதுபோனல் வேறொரு விகாரமும் ஏற்படப்போகிறதில்லை. பிறகு அறிந்ததின்மேல் அதை அடையவேண்டுமென்ற இச்சை வேண்டும். இந்த இச்சை இல்லாதிருந்தாலும் ஒன்றும் தோஷம் வந்துவிடாது. பிறகு இந்த இச்சையின்படி பிரவர்த்தி ஏற்படுகிறது. இதுதான் உலகவழக்கம்.

அப்படி இருந்தால் இந்த ஆத்யா பிரவர்த்தி அதாவது முதல் முதல் செய்யும் காரியம் எப்படி ஏற்பட்டது? எந்த ஞானத்தால்?

ஞானம் என்பது இரண்டு வகை. அனுபவம், ஸ்மரணம் என்று. அனுபவம் என்பது இது தூண், இது விளக்கு என்று நேரில் இருக்கும் வஸ்துக்களை அறிந்து கொள்ளுதல். எதிரில் இல்லாத வஸ்துக்களை முன்பார்த்த ஞாபகத்தால் தெரிந்துகொள்வது ஸ்மரணம்.

குழந்தைக்கு ஸ்தன்யபானத்தில் வந்த ஞானம் அனுபவமா? ஸ்மரணமா? ஸ்மரணம் என்றுதான் ஒத்துக் கொள்ளவேண்டியது. அனுபவம் என்றால் என்ன? அது மூன்று விதமானது. i. பிரத்யக்ஷாத்மகம், ii. அனுமித்யாத்மகம், iii. சப்தாத்மகம். குழந்தைக்கோ கண் மூடியிருக்கிறது. சில ஜந்துக்களின் குட்டிகள் பிறந்து சில தினங்கள்வரை கண் முழிக்கிறதேயில்லை. இதுபோலவே மற்ற இந்திரியங்களுக்கும் சக்தி கிடையாது. ஆகையால் பிறந்த குழந்தையின் ஞானம் பிரத்யக்ஷாத்மகமல்ல. அனுமித்யாத்மகமுமல்ல; பார்த்திருந்தாலல்லவோ ஊஹிக்கமுடியும். यत्र धूमः तत्र वह्निः புகையிருக்குமிடத்தில் நெருப்பு பிரத்யக்ஷாத்மக அனுபவமாகையால் புகையை வேறொரு இடத்தில் கண்டவுடன் நெருப்பு இருக்கிறதென்று ஊஹிக்கிறோம். பிறந்த குழந்தை ஸ்தன்யபானம் செய்யவேண்டுமென்று யாரிடம் முன்பார்த்துத் தெரிந்துகொண்டது.

சப்தமென்பது அர்த்தம் தெரிந்த வார்த்தையால் வரலாம். அர்த்தம் தெரியாமல் போனால் அரண்யகோஷம்போல் யாதொரு அனுபவத்தையும் அது உண்டுபண்ணுகிறதில்லை. ஆகையால் இந்த ஆத்ய ப்ரவிருத்தி ஸ்மரணத்தால் உண்டாயிற்று என்றுதானே சொல்லவேண்டியிருக்கிறது.

அனுபவமே இல்லையே. ஸ்மரணம் எப்படி வந்தது? ஜன்மாந்தரத்தில் இருந்து வந்தது என்று ஒப்புக்கொண்டே தீரவேண்டியிருக்கிறது.

ஜன்மாந்தரம் உண்டானல் ஆத்மா ஒன்று உண்டென்ப்தும், அது அழியாமல் வந்தது என்பதும் தெரியவருகிறது.

தவிர तनुरपि च कृत:? இந்த தேஹம் அநேக அவயவங்களான கை, கால், கண், மூக்கு, நாக்கு முதலியவைகளால் செய்யப்பட்டிருக்கிறது. அதினுலேயே இந்த தேஹத்திற்கு உடையவன் வேறு ஒருவன் இருக்கிறுன் என்றும், அவனுக்காக செய்யப்பட்டது இது என்றும் தெரியவரும்.

சிறு குழந்தையைக் கேட்டாலும், இது என்னுடைய கை, என்னுடைய கால் என்று சொல்லுகின்றதே தவிர கையினுடைய நான் என்று சொல்லுகிறதோ? ஒரு கிரஹத்தைப் பார்த்தால் யார் வீடு என்று கேட்கிறுேமேயொழிய, இந்த வீட்டுக்காக யார் பண்ணப்பட்டிருக்கிறுர்கள் என்று கேட்கிறுேமோ? இல்லேயே. அவயவபேதாத்மகமான இந்த சரீரம் பரார்த்தமானது, வேறுெருவருக்காகச் செய்யப்பட்டது என்று விசதமாகிறது. இந்த தேகத்திற்கு ஸ்வாதீனம் இல்லே. நிரவயவனுன ஸ்வாமி ஒருவனுக்காக ஏற்பட்டது என்று ஸித்தமாகிறது.

மேலும், போவதற்கும் ஒரு ப்ரேரணே வேண்டும். இதையார் செய்தது? தேஹமா? தேஹமானுல் செத்துப் போனதும் ஏன் ஞாபகமில்லே? ஏன் ஞானமில்லே? **किञ्चेत्ति प्रमीत:** தானே தெரிந்துகொள்கிறதுதானே?

ஒரேமாதிரி திரிக்கு ஒரேமாதிரி நெய் போட்டு விளக்கு ஏற்றினுல் எல்லா விளக்குகளும் சமமாகத்தான் எரியும். ஏற்றத்தாழ்த்தி இருந்தால் வித்யாஸம் வரும். இப்படியே ஒரே மாதிரி விதையை ஒரே நிலத்தில் விதைத்தால்

பயிர்கள் எல்லாம் ஒரே வகையாகவும் ஒரே விதமாகவும் தான் முளைக்கும். ஆனால் விதைகளில் ஜாதிவித்யாஸம் இருந்தால், பின்னம் ஏற்படும்; அல்லது விதைகள் க்ருமி தூஷிதமாய் இருந்தாலும் பயிர்களில் வித்யாஸமும், ஒரு ஸமயம் முளைத்து உண்டாகி பின்பு அழிந்துவிடும்.

இதையெல்லாம் தானாகவே ஆகிறது, அதன் ஸ்வபாவம் என்று சொல்லுவோம் என்றாலோ அதுவும் பொருந்தாது. தானாய் ஆகிறது என்ற வார்த்தைக்கு அர்த்தமே கிடையாது. முன் இல்லாதது தானே இப்பொழுது ஆயிற்று என்றுதானே நாம் அர்த்தம் செய்துகொள்கிறோம். அப்படியானால் இல்லாதது எப்படி உண்டாயிற்று? இப்படிப் பேசுதல் வீண் காலக்ஷேபமே தவிர பிரயோஜனம் ஒன்றும் இல்லை.

ஹிதம், அஹிதம் இதைச் சொல்லுவதுதானே சாஸ்திரம். அதாவது நமக்குத் தெரியாததைச் சொல்லுவது. தெரிந்ததைச் சொல்லவும் வேண்டுமோ?

गौरस्थूलो इवाहं पटुरिति च तनावात्मबुद्धिर्जडानां
स्वाभाव्यादेव सिद्धेत्यधिगमयदिदं निष्फलं दर्शनं ते ।
वेदद्वेषात्प्रवृत्तं यदि बत नितरां द्वेषमूलं प्रमाणं
दैवान्नष्टस्त्वमेकः किमिति शठ परान् हन्त हन्तुं प्रवृत्तः ॥

இவன் வெளுப்பு, இவன் தடியன், என்று சொல்ல சாஸ்திரம் வேண்டுமோ? சாப்பாட்டுக்கு சாஸ்திரம் சொல்லவேண்டுமோ? லௌகிக சாஸ்திர அப்யாஸத்தால் என்ன பிரயோஜனம்? வேத த்வேஷத்தால் வந்த வார்த்தைகளால் என்ன குணம் நமக்கு ஏற்படும்? த்வேஷமூலகமானவை பிரமாணங்கள் ஆகுமா? நான் எனது விரோதியின் மகனை,

"கிணற்றில் விழுந்தால் மோக்ஷம் கிடைக்கும்" என்று சொல்ல அவன் அதை நம்பி கிணற்றில் விழுவதுபோலாகும்.

**स्वयं नष्टः परान्नाशः ।**

தற்காலத்தில் பௌதிகசாஸ்திரங்களுக்கெல்லாம் "சாஸ்திரம்" என்று பேர் வந்திருக்கின்றது. எப்படிப்போலென்றால், பசுவின் பாலுக்குத் தான் "பால்" என்று பேர். கள்ளிப்பாலுக்கும் பால் என்று பெயர் அதுபோல். பசுவின் பாலைக் கண்ணுக்குப் போட்டுக்கொண்டால் கண்ணின் ரோகம் நீங்கி சுத்தமாகும். கள்ளிப்பாலைப் போட்டுக்கொண்டாலோ இருந்த கண்ணும் போய் உள்ளதும் நொள்ளையாகும்.

ஆதலால் வித்யாஸம் வந்ததிற்குக் காரணம் ஜன்மத்திற்கு முந்தி என்று சொல்வோமானால் ஆத்மா உண்டு என்பது ஸித்தமாகிறது.

**वैषम्यं कर्मजन्यं यदि गदसि जनेः पूर्वमप्यात्मसिद्धिः ॥**

இப்படி விசாரம் செய்ததில் நமக்கு ஆத்மா உண்டு என்பது கிடைத்தது. நாஸ்திகம் போயிற்று. போனதால் என்ன நஷ்டம்? தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனதுபோல் ஆகும், சிகா நாசத்தால் சிகி க்ஷேமத்தை அடைவதுபோல்.

சரீரம் ஸ்வதந்திரமானால், அது இஷ்டப்படியெல்லாம் இருக்கலாமே! இருக்க முடியுமோ? இது வக்கீல்களுக்கு நன்றாய்த் தெரியும். நியாயஸ்தலங்களில் கக்ஷியெடுத்துப் பேசும்பொழுது, ஒரு ஸமயம் ஐந்து, ஆறு மணி நேரம் நின்றுகொண்டே பேச நேரிடுகிறதாம். அத்தனை காலம் யார் அந்த தேஹத்தை நிறுத்தி வைத்தார்? தூக்கம் வந்தால் ஏன் விழுகின்றது? பிராணன் போனால் ஏன் விழுந்துவிடு

கின்றது? மரணத்தில் பிராணன் போய்விடுகின்றது, அவன் தாங்கிவந்தான், அவன் போய்விட்டான், ஆகையால் தேஹம் விழுந்துவிட்டது என்றாலோ, தூக்கத்தில் ஏன் விழுகின்றது? உடம்பே தானாக நிற்கவும் போகவும் முடியாது. அதற்கு ஸாமர்த்தியம் இல்லை. தனக்கு சிரமத்தால் படுத்துக்கொண்டது என்றாலோ சிரமம் இருந்தும் பொருள்படுத்தாமல் போவதைக் கண்டிருக்கிறோம். வீராவேசத்தால் ஸைனிகர்கள் குண்டுபட்டதுகூடத் தெரியாமல் சண்டை செய்கிறதில்லையா? धृति उत्साहम् முதலியவைகளால் நிச்சயம் பண்ணிக்கொண்டு சரீர சிமரத்தையும் பொருத்துக் கொள்ளுகிறதில்லையா? காலைவேளையில் ஸ்வல்பாஹாரம் செய்துக்கொள்ளும் மனிதன்கூட [illegible] சிறு தலை வலியையும் பொருத்துக் கொண்டு இருக்கிறதில்லையா? ஆகையால் கடோபநிஷத்தில் சொல்லியபடி:

न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।
इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥

பிராணாபானங்களினால் மனிதன் ஜீவிக்கிறதில்லை. எதில் இவை இரண்டும் ஆசிரயத்தை அடைந்திருக்கின்றனவோ அப்பேற்பட்ட வேறு ஒரு வஸ்துவினால்தான் ஜீவிக்கிறான்.

பிறவிக் குருடன் ஸ்வப்நாவஸ்தையில் தான் ஏதோ கண்டதாகச் சொல்லுகின்றானே அது எப்படி? அதே மாதிரி பிறவிச் செவிடன் கேட்டதாகச் சொல்லுகிறானே அது எப்படி? ஜ்வரக் கிரஸ்தனாய் இருப்பவன் ஜ்வரம் அடித்துக் கொண்டிருக்கும்பொழுதே ஜ்வரம் போனதாக நினைக்கின்றானே அது எப்படி?

पादांगुष्ठशिरोयावत् कणशः प्रविचारितः ।
न लब्धोऽसावहं नाम को सावयमितिस्थितः ॥

பாதம்முதல் தலை பர்யந்தம் துண்டு துண்டாய் பரிசோதித்துத் தெரிந்துகொண்டது என்னவென்றால் நான்வேறே என்பதுதான், நான் பார்த்த துண்டுகளில் ஒன்றிலும் கிட்டாததால். என்னுடைய கை, என்னுடைய கால் என்று சொல்வதிலிருந்தே நான் தனி என்பதும், நான் தேஹம் அல்ல என்பதும் ஸித்தமாகிறது.

கோயம்புரி என்று இந்தப்பட்டணத்திற்குப் பெயராம். எல்லோரும் "कोऽयम्" நான் யார், நான் யார் என்று விசாரம் செய்வது வழக்கமாய் இருப்பதால்தான் இந்த ஊருக்கு இந்தப் பெயர் ஸித்தித்ததோ என்னமோ! அதே விசாரம் உங்களிடத்தில் எல்லாம் இருக்கவேண்டும். பிரம்மாண்ட முதல் பரமாணுவரையில் தெரியும்: நான் யார் என்றால் அதுமட்டும் தெரியாது. இதைவிட துக்ககரமான அவஸ்தை என்ன இருக்கிறது? இந்த தேஹம் நான் என்பதை விட்டு, நான் வேறே, நான் நித்யன் என்று தெரிந்துகொள்ள வேண்டியது. வாஸிஷ்டத்தில் சொல்லுகிறார்

आपादमस्तकमहं मातापितृविनिर्मितः ।
इत्येको निश्चयो राम बाधायासद्विलोकनात् ॥
सा कालसूत्रपदवी सा महावीचिवागुरा ।
सा असिपत्रवनश्रेणि या देहेहमिति स्थितिः ॥

எவன் தேஹமே நான் என்று நினைக்கிறானோ அவன் நரக வேதனை அனைத்தையும் அனுபவிக்கிறான்.

योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते ।
किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

எவன், ஒருவிதமாய் இருக்கும் ஆத்மாவை வேறுவிதமாய்த் தப்பாய்த் தெரிந்துகொள்ளுகிறானோ அப்போர்பட்ட ஆத்மத்

திருடனால் என்ன பாபம்தான் செய்யப்படவில்லை என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆகையால் தேஹமே நான் என்பதை விட்டுவிடவேண்டியது. எவனுக்குத் தன்னைத்தவிர வேறு வஸ்து இல்லையோ அவனுக்கு சத்ரு மித்ரர் ஏற்படுகிறதில்லை. அவனுக்கு துக்கமே கிடையாது. சதா ஸந்துஷ்டனாய் இருக்கின்றான்.

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥

என்று கீதையில் சொல்லியபடி அவனுக்கு பஞ்சபூதங்களாலும், அஸ்திர சஸ்திரங்களாலும் துக்கமே ஏற்படுகிறதில்லை. ஸதா துக்கரஹிதனாய் ஆத்மாராமனாய் ஸந்தோஷத்துடன்கூடினவனாய் இருக்கிறான்.

அரண்யகோஷம்போல் நிஷ்பலமான இதர சாஸ்திர ஆராச்சியைவிட்டு, தேஹாந்தரமுண்டா, ஆத்மா யார், நான் நான் என்பது யார்? எது? என்று விசாரித்தால், தேஹாந்தரம் உண்டென்றும், ஆத்மா உண்டென்றும் தெரியவரும். அந்த நிச்சயத்தால் புண்யகர்மங்களில் ஆசையும், பாபத்தில் பயமும், உண்டாகும். சரீரம் ஆத்மா என்பது தொலையும். ஆத்மஸ்வரூபம் தெரிந்தவுடன் அப்பொழுதே த்வேஷாதிதோஷங்கள் தொலைந்து சுகமடையலாம். அதை எப்படி அடையலாம், அதற்கு மார்க்கம் என்ன, ஆத்மஸ்வரூபமென்ன என்பவை பின்னால் சொல்லப்படும்.



## II

பிரபவ-ஹூ வைகாசி-மீ 32-உ (பௌமவாரம்.)

14—6—1927.

நேற்று ஜன்மாந்தரம் உண்டு, சரீரம் ஆத்மா அல்ல, ஆத்மா நித்யன் என்று ஒத்துக்கொள்ளவேண்டுமென்று சொல்லப்பட்டது. இன்று வேதம் பிரமாணம் என்றும் ஒத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லப்போகிறது. ஏன்? ஜன்மாந்தரத்தை ஒத்துக்கொண்டதால்.

உலகத்தில் எல்லோருக்கும் சுகம் வேண்டும்; துக்கம் வேண்டாம் என்பதுதான் பிரியமாய் இருக்கிறது. सुखं मे भूयात् । दुःखं मे माऽभूत् । என்பதுதான் சகல பிராணிகளுக்கும் நோக்கம். இது மனுஷ்யஜாதிக்கு மட்டுமல்ல; ஸகல பிராணிகளுக்கும்கூட இதுதான் லக்ஷ்யம். கையில் ஒரு தண்டம் வைத்துக்கொண்டிருந்தால், பசுக்கள் அதைக் கண்டு பயந்து தூர ஓடிப் போகின்றன. ஏன்? கிட்ட வந்தால் அடி விழலாம்; அதனால் துக்கம் உண்டாகும்; நமக்கு துக்கம் வேண்டாம் என்பதினால்தானே? அதே மாதிரி கொஞ்சம் பில்லும் தண்ணீரும் வைத்துக்கொண்டிருந்தால் தூரத்திலிருந்துகூட கிட்ட வந்து, தின்ன ஆரம்பித்து, நீர் குடித்துப் போகிறது. ஏன்? இவைகளை உண்டு பசியாறலாம்; அதனால் சுகம் கிடைக்கும் என்பதனால் அல்லவா? சுகப்பிராப்தி, துக்கநிவர்த்தி இந்த இரண்டும் எல்லாருக்கும் லக்ஷ்யம் என்பதில் கொஞ்சம்கூட ஸந்தேஹம் இல்லை.

ஆனால் ஸகல பிராணிகளுக்கும் அது கிடைக்கிறதா? இதைத் தான் யோசிக்கவேண்டும். எல்லோருக்கும் வேண்

டுமென்ற ஆசைதான்; ஆனால் உபாயம் தெரியாது. சுகத்தில் இச்சை மாத்திரம் இருக்கிறது; பிரயத்தினங்கள் எல்லாம், துக்க காரகமாய் இருக்கின்றன. அவைகளையே செய்கிறது ஸாமான்ய வழக்கமாய் இருக்கின்றது. சுகப் பிராப்திக்கும், துக்க நிவர்த்திக்கும் உபாயம் என்ன? இந்த சுகம் நாஸ்திகனுடைய பிரமாணங்களினால் கிடைக்கக்கூடியதா என்று யோசித்துப் பார்ப்போம்.

முதலில் பிரமாணம் என்றால் என்ன? प्रमाकरणं प्रमाणम् அப்படி என்றால்? முன்னால் ஐந்து எழுத்தாய் இருந்தது இப்பொழுது எட்டு எழுத்தாய் ஆயிற்று; அர்த்தம் விளங்கவில்லையே! ஆகையால் प्रमा (ப்ரமா) என்றால் என்ன என்று விசாரிக்கவேண்டும். ப்ரமா என்றால் ஸரியான ஞானம், நல்ல ஞானம் என்று அர்த்தம். பிராந்தியால் தப்பான ஞானம் ப்ரமா அல்ல. கயிற்றைக் கயிறாக அறிந்தால் அது ப்ரமா, ஸரியான ஞானம் ஆகும். அதைப் பாம்பு என்று நினைத்தால் அது ப்ராந்தி, தப்பு. அதேமாதிரி கிளிஞ்சிலை (शुक्ति) கிளிஞ்சிலாக நினைத்தால் அது ப்ரமா. அதில் வெள்ளி இருப்பதாக நினைத்தால் அது அப்ரமா. இப்படியே ப்ரமா, அப்ரமாவாகத்தான் நம்முடைய அறிவு பிறந்திருக்கிறது. இந்த சரியான ஞானத்திற்கு எது காரணமோ அதாவது ஸாதனமோ அதுதான் ப்ரமாணம்.

இதோ! இந்த ஸ்தம்பம், இதைத் ஸ்தம்பம் என்று தெரிந்துகொண்ட ஞானத்திற்கு எது காரணம்? अयं स्तम्भः என்று நாம் எதனால் தெரிந்துகொண்டோம்? இந்த சக்ஷுஸ், கண்களால்தானே! ஆகையால் இது ஸ்தம்பம் என்பதற்கு கண்கள்தான் ப்ரமாணம். அதே மாதிரி சப்த ஞானத்திற்கு காதுதான் ப்ரமாணம். இப்படியே வாஸனைக்கு

க்ராணேந்திரியமும் (घ्राणेन्द्रियम्) ஸ்பர்சத்திற்கு த்வக்கும், ருசிக்கு ஜிஹ்வா, ரஸநேந்திரியமும் ப்ரமாணம் ஆகும். ஆகையால் ஸகல ஞானங்களுக்கும் பஞ்சேந்திரியங்கள்தான் பிரமாணமாகின்றன. ஆனால் நாம் பிரயாணம் போய்க் கொண்டிருக்கையில், அனேக வஸ்துக்களைப் பார்த்தும் பார்த்ததாக ஏன் ஞானம் ஏற்படுகிறதில்லை? மனது அந்த இந்திரியங்களிடத்தில் ஸம்பந்தமில்லாததால். ஆகையால் மனதுதான் ஸகல இந்திரிய ஞானத்திற்கும் காரணமாகின்றது. அந்த மனது எதனால் வேலை செய்கிறது? ஆத்மாவால். இதைத்தான்,

**आत्मा मनसा, मनः इन्द्रियेण, इन्द्रियादर्थे, अर्थात्प्रत्यक्षं** என்று நம்ம பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

இந்த விஷயத்தில் சார்வாகன் ப்ரத்யக்ஷம் தான் பிரமாணம் என்று சொல்லிக்கொண்டிருக்கிறானே அவன் அதை எப்படித் தெரிந்துகொண்டிருக்கிறான் என்று சற்று விசாரிக்கவேண்டும். அக்ஷம் என்றால் இந்திரியம் என்று பொருள். இந்திரியத்தால் தெரிந்தால்தான் பிரமாணம் என்கிறான். இந்திரியங்கள் என்றால் இந்த கோளாதிகளா? கண் என்றால் ஏதோ வெளுப்பாய்க் கருப்பு கலந்து இருக்கிறதே இதுவா? காது என்றால் இந்த கர்ணபாசமா? இந்த பௌதிகமான கருவிகளா இந்திரியங்கள்? இவைகளா ப்ரமாணங்கள்? அபபடியானால் கண் முதலிய இருந்தும் தெரியாமலும், காது கேட்காமலும் இருக்கும் ஜனங்களை நாம் பார்த்திருக்கிறோமே. நாம் கால் தட்டித்தடுமாறுதலாலும், பேசியும் பதில் சொல்லாததாலும் தெரிந்துகொள்ளவேண்டிவருவானேன். தானாகவே தெரிந்திருக்கவேண்டுமல்லவா? இந்த நேத்ரகோளமும், கர்ணபாசமும் ப்ரமாணமானால், அவர்

களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிவருவானேன்? இதா நா நிரபேக்ஷகமாய் ஏன் ஆகிறதில்லை. ஆகையால் அவனுக்கு ப்ரத்யக்ஷமென்பதற்கு அர்த்தமே தெரியாது என்று தெரிகின்றது. அதனால் நமக்கு ஞானம் உண்டாவது அதீந்திரியமானது; இந்திரிய வேத்யமன்று என்பது நிச்சயமாகிறது. கண்களினால் ஒரு வஸ்து இருக்கின்றது என்று தெரிந்துகொண்டான். ஸரி. அதேமாதிரி எனக்கும், மற்ற ஸகல பிராணிகளுக்கும் தெரிகின்றது என்று எப்படி தெரிந்துகொண்டான். அது ஊஹை அல்லவா? லோகத்திலிருக்கும் ஸகல கண்களுக்கும் பார்வை இருக்கின்றன வென்று எப்படி அறிகிறோம்? இது ப்ரத்யக்ஷமா, ஊஹையா, அல்லது சப்தமா? இன்றைக்குச் சாப்பிட்டோம், திருப்தியாயிற்று. நாளைக்கும் சாப்பிட்டால் திருப்தியாகும் என்பது ப்ரத்யக்ஷமா ஊஹையா? ப்ரத்யக்ஷமானால் நாளை சாப்பிடுவது என்னத்திற்கு? சார்வாகன் சொல்லுகின்ற ப்ரத்யக்ஷமொன்றுதான் ப்ரமாணமானால் உலகத்தில் ஒரு வியவஹாரமும் நடக்காது. ஒரு குழந்தை பிறக்கு முன் பிதா இறந்துவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். அந்தக் குழந்தைக்கு பிதா ப்ரத்யக்ஷம் அல்லாததால் அந்தக் குழந்தைக்குப் பிதா இல்லை என்று சொல்லிவிடுகிறதா? இந்தக் காரணத்தால் சப்தம் அனுமானம் இவ்விரண்டையும் ஒத்துக்கொண்டே தீரவேண்டும்.

அனுமானத்தைப்பற்றி ப்ரத்யக்ஷ ப்ரமாணம் பேசும் போதே சொல்லிவந்தோம். இனி சப்த ப்ரமாணத்தைப் பற்றிப் பேசுவோம். சப்த ப்ரமாணமென்றால் அர்த்தம் தெரிந்தவனுக்கு வார்த்தையைக்கேட்டமாத்திரத்தில் உண்டாகும் போதம். குழந்தை பிறந்ததாக ஒரு கடிதம் வந்தால் அதைக்கண்டு நாஸ்திகன் எப்படி ஸந்தோஷப்படலாம்? அவ


கோவிலூர் ஆதீனம்
2009
R65

னுக்குக் கடிதம் ஒன்றுதான் பிரத்யக்ஷமேதவிர குழந்தை யாவது பாணத்தியாவது பிரத்யக்ஷமல்லவே! அவன் ஏன் சர்க்கரை வழங்குகிறுன். கடிதம் மட்டும் வந்ததற்காக கற் கண்டு கொடுப்பதுண்டோ?

ஒருவன் இரண்டு விரலை நீட்டினல் மற்றொருவனுக்கு சரியாய் அர்த்தமாகிறது எப்படி? ஸங்கேதம் தெரிந்திருந்த தால் தானே? மற்றவர்களுக்கு இரண்டு விரல் நீட்டினது பிரத்யக்ஷம். மற்றபடி என்ன? இரண்டு ரூபாயோ மற்றும் வேறு இரண்டு வஸ்துவோ ஒன்றும் போதமாகிறதில்லை. ஸங்கேதம் தெரிந்தவன்மட்டும் சரியாய் அர்த்தம் செய்து கொள்ளுகிறுன். ஸங்கேதம் தெரிந்தவனுக்கு மட்டும் இந்த அர்த்தவிசேஷப் பிரதிபத்தி உண்டாகிறதே தவிர, மற்றவர் களுக்கு கேவலம் இந்த அங்குளித்வயம் மட்டும் பிரத்யக்ஷ மாகிறது. இந்த சேஷ்டையை சிலர் சப்தபிரமாணத்தில் சேர்த்துக்கொள்ளுகிறுர்கள். தார்க்கிகன் இதை ஒரு பிர மாணம் என்கிறுன். மேலும் நாஸ்திகனுக்கு பிரத்யக்ஷமட் டும் ப்ரமாணமானல், நாம் கேட்கிறோம்,

मानं प्रत्यक्षमेकं यदि कथय कथं भाषितं ते प्रमाणम्
संभाव्यार्थं सदोषं यदि कथय कथं न वेदो विदोषः ।
किं चाध्यक्षं विनाक्षैर्न भवति सुगमा मानताध्यक्षमात्रे
ज्ञानं नान्यस्य बोद्धुं प्रभवति च भवांस्तेन मिथ्या प्रलापी ॥

உனக்கு ப்ரத்யக்ஷம் மாத்திரம் ப்ரமாணமானல் நீ பேசுகி றுய் என்பது எப்படி ப்ரமாணமாகுமென்று? நாஸ்திகன் பேசுகிறுன் என்று அவனுக்கு எப்படித் தெரிந்தது சப்த ப்ரமாணத்தை ஒத்துக்கொள்ளாவிட்டால்?

ஆகையால் பிரத்யக்ஷம், அனுமானம். சப்தம் இந்த மூன்று ப்ரமாணங்களையும் ஒத்துக் கொள்ளவேண்டும். இன்னும், நம்மவர்கள் அர்த்தாபத்தி முதலிய ப்ரமாணங்கள் சொல்லுகிறார்கள். அவைகளை எல்லாம் பற்றி இப்பொழுது பேசவேண்டியதில்லை. இந்த மூன்று ப்ரமாணங்களையும் ஒப்புக்கொண்டாலும் அவைகளும் திருப்திகரமாய் இல்லை.

முதலில் பிரத்யக்ஷத்தை எடுத்துக்கொள்வோம். இந்திரியதோஷத்தால் வித்யாஸம் தோன்றுகிறதில்லையா? ஒருவனுக்கு காமாலை தோஷத்தால் சுவர் எல்லாம் மஞ்சளாய்த் தெரிகிறதில்லையா? கண்ணின் தோஷத்தால், பெரிய பதார்த்தங்களும் சிறியதாய்த் தோன்றுகிறதில்லையா? ஆகையால் இந்தப் பிரத்யக்ஷம் ஸதோஷமாயும், விபரீதமாயும் இருக்கின்றது. மேலும் ஊஹையும் அப்படியே. ஸதூஹையும், துரூஹையும் இருக்கும். இரண்டுபேர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது, அவர்கள் ஒருதடவை நம்ம பக்கம் திரும்பிப் பார்த்துப் பேசினால் நம்மைப்பற்றித்தான் பேசுகிறார்கள், நமக்கு ஏதோ ஹிம்ஸை செய்ய உத்தேசிக்கிறார்கள் என்றும், அதனால் நாம் தயாராகவேண்டுமென்றும், யோசித்துக்கொண்டு, கக்ஷிப் பிரதிகக்ஷி ஏற்படுத்திக்கொண்டு அநர்த்தம் உண்டாகுவதை நாம் பார்த்திருக்கிறோமே! இந்த ஊஹையை எப்படி பிரமாணமாக பூர்த்தியாய் நம்பிவிடலாம்? இதேமாதிரிதான் சப்தமும். ஒருவன் ஸாக்ஷ்யம் சொல்லும்போது அதை முழுவதும் நம்பி, பிறகு அந்த மனிதனிடத்தில் தோஷம் கண்டவுடன் அவனுடைய ஸாக்ஷ்யத்தை விலக்கிவிடுகிறோமல்லவா? பூர்வாபரவிரோதம் முதலிய தோஷங்களைக்கண்டாவது அல்லது ஸாக்ஷியானவன் பொய் சொல்வதே வழக்கம் என்று கண்டபின்னாவது விலக்கிவிடுகிறோமல்லவா?

ஆகையால் இந்த மூன்று ப்ரமாணங்களான பிரத்ய க்ஷம், அனுமானம், சப்தம், இவை ஸதோஷமாய் இருப்ப தால், இவைகளைவிட்டு நிர்தோஷமாயும், ஈசுவரனால் செய்யப் பட்டதாயும் இருக்கிற வேத சாஸ்திரத்தை பிரமாணம் என்று ஒத்துக்கொள்வதில் உனக்கு என்ன தலைவலி என்று ஆஸ்திகன் நாஸ்திகனைக் கேட்கிறான்.

சார்வாக தர்சனம் ஸரியானால், தினம் நடக்கிற வியவ ஹாரங்கள் ஒன்றும் நடக்க முடியாது. நாம் பார்த்திராத பட்டணங்கள், தேசங்கள் இவைகள் இருப்பதாக நாம் நம்பு கிறோமே, அது எப்படி? ஆகையால் இந்த சார்வாகனின் புத்தி அதி ஸ்தூலமானது என்று நிச்சயமாகிறது. அதீந் திரியமாய் இருப்பதை சாஸ்திரத்தால் அறியலாம். ஆகை யால் சாஸ்திரம்தான் பிரமாணம்.

நாம் முன் சொன்னபடி ஸகல ஜனங்களுக்கும் சுகம் தான் வேண்டும், துக்கம் வேண்டுவதில்லை. நமது ஆசார் யார் சத சுலோகீ என்ற கிரந்தத்தில்

यः कश्चित्सौख्यहेतोस्त्रिजगति यतते नैव दुःखस्य हेतोः
देहेऽहंता तदुत्था स्वविषयममता चेति दुःखास्पदे द्वे ।
जानन्रोगाभिघाताद्यनुभवति यतोऽनित्यदेहात्मबुद्धिः
भार्यापुत्रार्थनाशे विपदमथ परामेति नाराति नाशे ॥

என்றபடி மூன்று லோகத்திலும் ஒருவனுக்கும் துக்காபே க்ஷையே இல்லை. எல்லோருக்கும் சுகம்தான் வேண்டும். துக்கம் வேண்டாம் என்பது இருந்தும் உலகத்தில் துக்கமே ஜாஸ்தியாய்க் காண்பானேன்? துக்கம் ஒருத்தருக்கும் அபே க்ஷையில்லையே. அப்படி இருந்தும் அது அதிகமாக ஏன் காணப்படுகின்றது? சுகம் எல்லாருக்கும் தேவை; அதற்கா

கத்தான் ஸர்வ பிரயத்தனமும் செய்யப்படுகிறது; ஆனால் அது துர்லபமாக காணப்படுகின்றது. ஏன்? துக்கம் ஒருவருக்கும் இஷ்டமில்லாமலிருந்தும் அது ஏன் ஏற்படுகின்றது? எல்லாருக்கும் தேஹஆரோக்யம் பிரியம்தான். அதற்காக ஸர்வ ஜாக்கிரதையாக இருக்கிறோம். அப்படியும் ஏன் ரோகம் வருகின்றது? தேஹம் ஸரியாய் இருப்பதற்காக காலாகாலங்களில் போஜனம் செய்கிறோம்; ரோகஸாதனமான பதார்த்தங்களை ஸேவிக்கிறதில்லை; தேஹம் தார்ட்யத்தை அடைவதற்காக, அதைச் செய்து கொடுக்கும் பதார்த்தங்களை உண்கின்றோம். அப்படி இருந்தும் ஏன் நமக்கு ரோகம் வருகின்றது?

இந்த மாதிரி நமக்கு துக்க ஸாதனமும், சுக ஸாதனமும் தெரிந்தால், துக்க ஸாதனங்களை நீக்கி சுக ஸாதனங்களைக் கையாடுவோமல்லவா? நம்மிடத்தில் துக்கமிருப்பதினாலேயே நமக்கு சுக ஸாதனம் இன்னது என்று தெரியவே தெரியாது என்று சொல்லலாம். நமக்கு துக்கம் வந்ததற்கு காரணமே தெரியாது. நாம் செய்துகொண்டுவந்த பிரயத்னங்கள் எல்லாம் விபரீதப் பிரயத்னங்கள் என்று நிச்சயம் செய்துக்கொள்ளவேண்டி வருகின்றது. ஏன் என்றால், சுக ஸாதனத்தால் துக்கமேற்பட்டால் அது சுக ஸாதனமாகுமோ? அபேக்ஷை என்னமோ சுகம்தான்; அது ஸகலருக்கும் ஒன்றுபோல் வேண்டியதுதான். ஆனால் பிரயத்னம் மட்டும் வித்யாஸம்.

**पुण्यस्य फलमिच्छन्ति पुण्यं नेच्छन्ति मानवाः ।**
**न पापफलमिच्छन्ति पापं कुर्वन्ति यत्नतः ॥**

என்றபடி புண்ணியத்தின் பலனை மட்டும் இச்சிக்கிறார்கள் ஜனங்கள். ஆனால் புண்ணியம்மட்டும் செய்கிறதில்லை.

பாபத்தின் பலனை இச்சிக்கிறதில்லை, ஆனால் பாபமே பிரயத்னப்பட்டுச் செய்கிறார்கள். சுகத்திற்கு புண்ணியம் ஸாதனம் என்றும், துக்கத்திற்கு பாபம் காரணம் என்றும் ஜனங்கள் தெரிந்துகொள்ளுகிறதில்லை. ஸாதனானுஷ்டானம் ஸரியாய் இருந்தால் பலம் வராமல் இருக்காது. விபரீதபிரயத்னம் செய்துக்கொண்டிருப்பதால்தான் ஸந்தோஷம் வருகிறதில்லை.

ஆனால் நாம் ஸந்தோஷப்படுகிறதில்லையா என்றால் இப்போது செய்த பிரயத்னத்தால் அல்ல என்று சொல்லிவிடலாம். ஏதோ முன்ஜன்ம ஸுக்ருதவசத்தால் வந்திருக்கலாம். அல்லது சாஸ்திரக்காரர்கள்

त्रिभिर्वर्षैस्त्रिभिर्मासैस्त्रिभिःपक्षैस्त्रिभिर्दिनैः ।
अत्युत्कटैःपुण्यपापैरिहैव फलमश्नुते ॥

என்று சொல்லியிருக்கிறபடி, ஏதோ விசேஷ புண்ணிய பாபங்களின் பலங்களை இந்த ஜன்மத்திலேயே இந்த லோகத்திலேயே அனுபவிக்கலாம் அல்லவா? நிரம்ப கெட்டபாபங்களைச்செய்தவர்கள் நம் கண்முன் அழிந்ததை பார்த்ததில்லையா? அதேமாதிரி பகுசிரேஷ்டமான புண்ணியத்தால் சுகத்தை அடைந்தவர்களையும் கண்டதில்லையா? வித்யாரண்யாள் ஸ்ரீ புரச்சரணம்செய்து கனகதாரை பெய்யப்பெற்றார் என்று கேட்டிருக்கிறோமே. ஆகையால் நமக்கு துக்கஸாதனம் இன்னதென்று நன்றாய்த் தெரிந்தால் ஸாத்தியமானவிடத்தில் பிரதிக்கிரியை செய்துகொண்டு க்ஷேமத்தை அடையலாம் அல்லவா? ரோகம் வந்ததும் எப்படி சிகித்ஸை செய்துக்கொள்ளுகிறோமோ அப்படியே துக்கம் வந்தபொழுது அதற்கு பரிஹாரமும் செய்துக்கொள்ளலாமல்லவா? மேல்கண்ட விசாரத்தால் நாம் தெரிந்துகொண்டது, துக்கத்

திற்குக் காரணம் நமது பிரயத்தனம் ஒன்று, மற்றொன்று அதிர்ஷ்டம் என்பது.

தற்காலத்தில் பாச்சாத்தியர்கள் (மேற்கத்தியவர்) எதையும் புருஷப்பிரயத்தனத்தால் ஸாதித்துவிடலாமென்று ஏதோ சொல்லுகிறார்களாம். அப்படி இருந்தால் எல்லாரும் எதையும் ஸம்பாதித்துவிடலாமே. அவர்கள் எத்தனையோ "சாஸ்திரங்கள்" எழுதியிருக்கிறதாகச்சொல்லுகிறார்கள். அதில் எதிலாவது ஸகல ஜீவராசிகளும் துக்கமில்லாதிருக்க ஏதாவது சொல்லப்பட்டிருக்கிறதா? அவர்களுக்கு அந்த விஷயம் தெரியவே தெரியாது என்றே தோன்றுகிறது.

புருஷப்பிரயத்தனத்தால் ஸாதிப்பது வாஸ்தவமானால் விகாதம் வந்து ஏன் தடை செய்கின்றது? அதனால் புருஷப்பிரயத்தனம் மட்டும் பூரண ஸாதனம் ஆகாது என்பது தெரிகின்றது. புருஷப்பிரயத்தனத்தால் ஸாதிக்கின்றதென்றால் வேண்டியபோது மழை பெய்விக்கிறதுதானே. அல்லது ஜாஸ்தி மழை பெய்யும்போது தடுத்துவிடுகிறதுதானே!

ஒரு கதை ஞாபகம் வருகிறது. ராயருடைய தேசத்தில் மழை இல்லாமல் பயிர்கள் வாடும்பொழுது ஆஸ்தான ஜோஸ்யரை அழைத்து மழை எப்பொழுது பெய்யும் என்று கேட்டதாகவும், ஜோஸ்யர் ராஜஸம்மானத்தைக்கருதி ராஜாவினுடைய வயலுக்குமட்டும் மழை பெய்யும் என்று சொல்லிவிட்டு, ராத்திரிபோய் வெகு சிரமப்பட்டு தண்ணீர் இறைத்துவந்ததாகவும் கேட்டிருக்கிறோம். மழை பெய்யவேண்டுமானால் கிரகசாரம் சரியாய் இருக்கவேண்டாமா? மழையை புருஷப்பிரயத்தனத்தால் கொண்டுவர முடியாது என்று தோன்றுகின்றது.

இது போகட்டும். ஒருவனுக்கு மகத்தான பசி என்று வைத்துக்கொள்வோம். ஸகல ஸாமக்கிரீகைகளும் தயாராய் இருந்தும், பாகமாகாமல்போனால் என்ன செய்கிறது? பாகம் ஆகும்வரை காத்திருந்துதானே தீரவேண்டியது. இந்த இடத்தில் புருஷப் பிரயத்னம் என்ன செய்யும்? எல்லாம் ஸம்பாதித்தாய்விட்டது. நிறைய பதார்த்தங்கள் இருக்கின்றன. சாப்பிட மட்டும் கொடுத்துவைக்கவில்லை. குன்மரோகம். இதற்கு என்ன செய்வது? போகட்டும், நாம் தயாராய் இருக்கிறபோதும் நினைத்தபோதும் தூக்கம் வருகிறதுதானே! தேடியும், பிரயத்னப்பட்டும் நித்திரை வாராமல் எத்தனையோ பேர் துக்கப்படுவதைக் கண்டிருக்கிறோமே. இவைகள் நம்முடைய ஸ்வாதந்திரத்தில இல்லை. துக்கம் ஒருபொழுதும் அனுபவிக்காதவனே ஸ்வாதந்திரியன். நமக்கெல்லாம் துக்கம் ஜாஸ்தியாயும், ஏதோ கொஞ்சம் சுகமிச்ரிதமாய் இருக்கிறதே தவிர துக்கமே இல்லாமலா இருக்கிறோம்! இல்லவே இல்லையே!

யாராவது ஒருவன் திருடிவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். அவன் என்ன செய்வான்? பந்தனுகாரத்தைத் தேடியா போவான்? இல்லை. அந்த சிறையை எவ்வளவு தூரத்தில் நிறுத்தலாமோ அதைத்தானே தேடுவான். ஒரு வேளை ராஜ உத்தியோகஸ்தர்கள் பிடித்தாலும், தப்பிக்கப் பார்ப்பானே தவிர பந்தனுகாரத்தையா தேடிப் போவான்! தான் செய்தது தப்பிதம் என்று தெரிந்து கொண்டு பந்தனுகாரத்தைத் தேடிப்போகிற சுத்தாத்மா முதலில் திருடப்போவதில்லை. அப்படித் திருடினாலும் சிக்ஷைக்கு யோக்யனல்ல. ஆகையால் இவ்வளவு சிரமப்பட்டு ஓடியும், திருடனுக்கு சிக்ஷை ஏற்பட்டு தண்டனை அடைந்து கிலேசமடைவதை நாம் பார்த்திருக்கிறோமே.

ஆகையால் நமக்கு ஏன் துக்கம் வந்திருக்கின்றது என்று யோசிக்கவேண்டியது. நமக்கு ஸ்வாதந்திரியம் இல்லை. நாம் பாதந்திரிகள். ஆனதால்தான் நாம் துக்கத்தைத் தூர தூரத்த முடியவில்லை. துக்க நிவர்த்திக்குச் ஸரியான வழி தெரியாது. ஆகையால் மேலே சொன்ன மூன்று ப்ரமாணங்களை ஒப்புக்கொண்டும், நமக்கு ஸ்வாதந்திரியம இல்லை என்று தெரிந்துகொண்டும், நாம் ஈசுவரனுடைய தயவை ஸம்பாதிக்கவேண்டும் என்பதையும் செவ்வையாய் அறிந்து கொள்ளவேண்டும். முன் சொன்னபடி மூன்று பிரமாணங்களும் தோஷஸஹிதமாய் இருக்கின்றபடியால், நிர்தோஷமாய் இருக்கிறதாயும், நிஷ்பக்ஷபாதியான ஸர்வேசுவரனால் செய்யப்பட்ட சாஸ்திர பிரமாணத்தை ஒத்துக்கொள்ள வேண்டும்.

ஆனால் வேதசாஸ்திரங்கள் அனந்தமே. अनन्ता वै वेदाः என்று சொல்லப்பட்டிருக்கின்றதே என்றால், எது ஸாரபூதமோ அதைத் தெரிந்துகொண்டு அதன்படி நடக்கவேண்டும்.

**अनेकशास्त्रं बहु वेदितव्यं अल्पश्चकालो बहवश्च विघ्नाः ।**
**यत्सारभूतं तदुपासितव्ययं हंसो यथा क्षीरमिवांबुमिश्रात् ॥**

என்று சொல்லியிருக்கிறபடி முக்கியமானதைத் தேடி தெரிந்துகொண்டு அதன்படி நடக்கவேண்டும்.

ஜனித்தவனுக்கு எப்பொழுதும் மிருத்யு தயாராய்க் காத்துக்கொண்டிருக்கிறது जातस्य ध्रुवो मृत्युः என்பது நிச்சயம். அதிலும் நல்லகாரியங்கள் செய்யும்போது அநேக விக்கினங்கள் வருகின்றன. श्रेयांसि बहु विघ्नानि என்பது பெரியோர் வாக்கியம். விசுவாமித்திரர் தபசு செய்த காலத்தில் அநேக விக்கினங்கள் வந்ததாக ஸ்ரீமத்ராமாயணத்தில் சொல்.

லியிருக்கின்றது. நாங்கள் எல்லாரும் பாஷ்யாதிகள் படிக்கும்காலத்தில் விக்கின நிவாரணத்திற்காகத்தான் சாந்திபாடம் சொல்லுகின்றோம். ஏன் என்றால், படிக்கிறவன் படித்து மேலான பதவிக்கு போய்விட்டால், தங்களுக்கு யஜமானன் ஆகிவிடுவான், தங்களுக்கு ஹவிர்பாகாதிகளைக் கொடுக்கமாட்டான் என்று தெரிந்துகொண்டு, தேவர்கள் இவனுக்கு அனேக விக்னங்களைச்செய்கிறார்கள். அதினால்தான் **शन्नो मित्रः शं वरुणः शन्नो भवत्वर्यमा** என்று அவர்களுக்கு லஞ்சம் கொடுக்கிறமாதிரி கொடுத்து, அவர்கள் தயையை ஸம்பாதித்து மேலே போகிறோம்.

அனந்தமாயும், பஹுவிக்கினஸமேதமாயும், நீண்டதாயும் இருக்கிற சாஸ்திரத்தை, வேதப்பிரமாணப்படி நூறு வயதுள்ள மனுஷ்யன் எப்படி அப்யாஸிக்க முடியும்? இந்தக்காலத்தில் ஐம்பது வருஷத்திலேயே வார்த்தக்யம் வந்துவிடுகின்றது. ஒரு சாஸ்திரத்திற்கு சுமார் எட்டு வருஷம் வேண்டிவருகின்றது. அப்படி நாஸ்திக ஷட்கமும் ஆஸ்திக ஷட்கமும் வாசிக்க எத்தனை நாள் வேண்டுமோ? வேதமோ அனந்தம். நாலு வேதமாக வாசிக்கவோ காலம் போதாது. ஒரு சாகை வாசிக்கக்கூட காலம் போதாது. அதிலும் பர்த்ருஹரி சொல்லுகிற பிரகாரம்,

आयुर्वर्षशतं नृणां परिमितं रात्रौ तदर्धं गतं
तस्यार्धस्य परस्य चार्धमपरं बालत्ववृद्धत्वयोः ।
शेषं व्याधिवियोगदुःखनिरतं सेवादिभिर्नीयते
जीवे वारितरङ्गचञ्चलतरे सौख्यं कुतः प्राणिनाम् ॥

என்று சொல்லி இருக்கிறார். ஒரு மனிதன் நூறு வருஷம் இருந்தாலும் பாதி தூக்கத்தில் போய்விடுகின்றது. ஏனென்றால் ராத்திரியானது விச்ராந்திக்காகவே ஏற்பட்டது. பக

லெல்லாம் வேலை செய்து பரிச்ரமப்பட்ட பிறகு ராத்திரி இளைப்பாற ஏற்பட்டிருக்கிறது. அந்தக் காலத்தில் வெகு சிரத்தையுடன் செய்யப்படும் சிராத்தம்கூட செய்யக்கூடா தென்று விதி ஏற்பட்டிருக்கிறது.

**नक्तं श्राद्धं न कुर्वीत । अन्यत्र राहु दर्शने ॥**

என்று சொல்லி இருக்கிறது. சிராத்தத்தை ராத்திரியில் செய்யாதே கிரஹணகாலத்தில் மட்டும் வேறு என்று உப தேசமாய் இருக்கிறது அதனால்தான் பூர்வாங்ஹம் என்றும், அபராங்ஹம் என்றும் பிரித்து அதில் அதில் செய்யவேண் டிய காரியங்களைச் சொல்லி இருக்கிறார்கள்.

இப்படி ராத்திரியில் பாதிகாலம் போய்விட்டபிறகு, மிச்சம் இருக்கிறது வருஷம் ஐம்பது. அதில் பால்யாவஸ் தையில் எட்டு வருஷமும், விருத்தனாய் எண்பது வருஷத் திற்குப் பின் இருபது வருஷத்தில் கிடைத்ததும், இப்படி யாக சுமார் பதினான்கு பதினைந்து வருஷங்கள் போய்விடு கின்றன. பாக்கி இருப்பது வியாதி, துக்கம், வியோகம் இவைகளில் எல்லாம் தொலைந்துபோகிறது. இந்தப் பிராணி களுக்கு எங்கிருந்து சுகம் கிடைக்குமென்று இரங்கிச் சொல்லி இருக்கிறார் கவி. நூறு வருஷம் உயிரோடிருந்தால் அதை அத்புதமாய் அல்லவோ சொல்லுகிறோம். அதனா லேயே அனேகர் அந்த வயதுவரை உயிரோடிருக்கிறதில்லை என்று விசதமாகிறது. இப்படி நூறு வருஷம் இருந்தால் ஏதோ சுமாராகப் படிக்கலாம். நாம் நூறு வருஷம் இருப் போம் என்பது நிச்சயமோ? எப்பொழுது விழுந்துவிடு மோ இந்த சரீரம்.

**कोहि जानाति......अनित्यं खलु जीवितम् ।**

ஆனால் இந்த ஜன்மத்தை விட்டு வேறு எதிலாவது படிக்கலாமென்றாலோ, மறுபடி வருவது எந்த ஜன்மமோ? மனுஷ்ய ஜன்மத்தில் ஸாதனம் செய்யாமல் பகுத்தறிவு இல்லாத திர்யக் ஜந்துக்களின் ஜன்மாக்களில் அறியக்கூடுமோ? முடியாது என்பதில் ஸந்தேஹமுண்டோ? இதே ஜன்மத்தில்தான் ஆகவேண்டும்.

युवैर्धर्म शीलत्वात् என்று சொல்லி இருக்கிறது.
இந்த ஜன்மத்திலோ அனேக விக்னங்கள் வருகின்றன.

प्रारभ्यते न खलु विघ्नभयेन नीचैः
प्रारभ्य विघ्ननिहिता विरमन्ति मध्याः ।
विघ्नैर्मुहुर्मुहुरपि प्रतिहन्यमानाः
प्रारब्धमुत्तमगुणा न परित्यजन्ति ॥

என்றபடி அதமன் விக்கினம் வந்துவிடுமென்று காரியம் துடங்குவதே இல்லை. மத்யமன் விக்னம் வந்தபோது காரியத்தை விட்டுவிடுகிறான். உத்தமன் அடிக்கடி விக்னத்தால் அடிபட்டாலும் அவைகளையெல்லாம் வென்று காரியஸித்தியை அடைகிறான். சிரேயஸ்ஸுக்கு பகுவித விக்னம் உண்டாகின்றது. அப்படி இருந்தபோதிலும் எல்லாவற்றையும் ஜயித்து சாஸ்திராப்பியாஸம் செய்து ஹம்ஸம் எப்படி தண் கலந்த பாலில் பாலை மட்டும் சாப்பிட்டுவிட்டு தண்ணை விட்டுவிடுகின்றதோ அதேமாதிரி यत्सारभूतम् சாஸ்திரம் அதை அப்யாஸிக்கவேண்டும்.

எது ஸாரபூதமோ அதை நாமே அறிந்துகொண்டு விடலாமோ! முன் சொன்ன பிரத்யக்ஷ, அனுமான, சப்த பிரமாணத்தால் அறிந்துகொண்டுவிடலாமோ! மூன்று பிரமாணத்தினாலேயே தர்க்க ஸாதனத்தைத் தெரிந்துகொண்டு விடலாமோ!

இந்தக் காலத்தில் தனம்தான் சுகஸாதனம் என்று தெரிந்துகொண்டிருக்கிறார்கள். அதுவே அனர்த்தஸாதனம் என்று பெரியோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

अर्थानां आर्जने दुःखं आर्जितानां च रक्षणे ।
आये दुःखं व्ययेदुःखं किमर्थं दुःख भाजनम् ॥

अनन्त पारा दुष्पूरा तृष्णादुःख शतावहा ।
अधर्मबहुला चैव तस्मात्तां परित्यजेत् ॥ (भारद्वाजः)

अकिञ्चनत्वं राज्यं च तुलया समतोलयत् ।
अकिञ्चनत्वमधिकं राज्यादपि हितात्मनः ॥ (वसिष्ठः)

अर्थसम्पद्विमोहाय विमोहो नरकाय च ।
तस्मादर्थमनर्थाख्यं श्रेयार्थी दूरतस्त्यजेत् ॥ (कश्यपः)

यस्य धर्मार्थमर्थेहा तस्यानीहा गरीयसी ।
प्रक्षालनाद्धि पङ्कस्य दूरादस्पर्शनं वरम् ॥ ( „ )

इहैवेदं वसुप्रीत्यै प्रेत्य वै कुण्ठितोदयम् ।
तस्मान्न ग्राह्यमेवैतत् सुखमात्यन्तमिच्छता ॥ (अत्रि)

மேலும் இது யுக்திக்கும் ஒத்ததாய் இருக்கின்றது. பணம் ஸம்பாதித்துவிட்டால் அதைக்காப்பாற்ற எத்தனை பிரயத்தினம் வேண்டியிருக்கிறது. அதில் எவ்வளவு கஷ்டம் உண்டாகின்றது. சுகஸாதனத்தை தேடின நமக்கு இந்த துக்கம் வந்தது ஏன்? சுகமாகவல்லவோ இருக்கவேண்டும். அப்படியே பணம் செலவழியுங்காலத்திலும் துக்கம் நமக்கு உண்டாகிறது. அது ஏன்?

குடும்ப பாரணத்திற்காக ரூபாய் நூறு வேண்டிவரும் என்று வைத்துக்கொள்வோம். அது வந்துவிட்டால் ரூபாய் இருநூறுவேண்டும்; அப்புறம் முந்நூறு; இப்படியே போய்க் கொண்டிருக்கும். இதற்கு எல்லையே கிடையாது. ஸம்பாதன துக்கத்திலேயே காலம் சென்றுகொண்டிருக்கும். சுகம் மட்டும் கிடைத்திருக்காது. இதுவா சுகஸாதனம் ?

ஒன்றிலிருந்து ஒன்றைக்! கண்டுபிடிக்கிறார்களாம்! ஸரி. இருக்கிற சக்தியைத்தானே பரிசிரமப்பட்டுக் கண்டு பிடிக்கிறார்கள். இந்த வித்யுத்சக்தியினால் விளக்குகள் போடப்படுகின்றன. இதில் சுகம் வாஸ்தவமா ? வெளிச்சமென்னவோ நன்றாகத்தான் இருக்கிறது. சக்தியை எடுத்து வரும் கம்பிகளை குரங்குகள் பிடித்து எத்தனை குரங்குகள் செத்துப்போகின்றன. மேலும் கல்யாணகாலங்களில் நின்று போய்விட்டால் எத்தனை துக்கம் ஏற்படுகிறது. நம்முடைய விளக்குகள் அணைந்தாலும், உடனே ஏற்றிவிடலாம். இவைகளை சரிப்படுத்த அநேக நாட்கள் வேண்டும். அதைத்தெரிந்த மற்றொருவன் வரவேண்டும். மனுஷ்ய பிரயத்தனத்தால் எல்லாம் ஸாதிக்கமுடியுமானால், எண்ணை வேண்டுமானால் மணலை யந்திரத்தில் கொடுத்து எண்ணையை ஏன் எடுக்கவில்லை ? அதை ஏன் கண்டுபிடிக்கவில்லை ?

ஸர்வத்திராளுக்கு சுகம் கிடைக்க வழி பாச்சாத்தியர்களுக்குத் தெரியாது. அது அவர்கள் புஸ்தகங்களில் எங்காவது உண்டா ? உண்டானால் சொல்லலாம். அப்படியானால் அவர்கள் எல்லாராலும் பூஜிக்கத் தகுந்தவர்கள். அவர்களை குருவாக ஸ்வீகரிக்க யாதொரு ஆக்ஷேபணையும் இல்லை. அப்படிப்பட்ட மனிதன் ஒருவன் இருந்தால் அவன் ஸர்வேச்வரனாகிவிடுவான். அவனுக்குப் பெரிய பிரதிஷ்டை

கிடைக்கும். அவனும் சுகமடைவான். மற்றவர்களுக்கும் சுகம் கிடைக்கும்.

இதெல்லாம் பாச்சாத்தியர்களுக்குத்தெரியவே தெரியாது என்று சொல்லலாம். தனம் தனம் என்று கஷ்டப்படுகிறார்கள். தனம் இருந்த இடத்தில், சுகத்தைத்தவிர, கஷ்டமே இல்லாதிருக்கவேண்டும். அப்படி உண்டோ உலகத்தில்? ஸ்ரீமான்கள் துக்கப்படுகிறதில்லையா? தரித்திரர்கள் சுகிகளாய் இருக்கிறதில்லையா? தனமா சுககாரணம்?

காரணம் என்றால் என்ன? எது இருந்தால் காரியம் ஆகிறதோ, எது இல்லாவிட்டால் காரியம் ஆகிறதில்லையோ அது அல்லவா காரணம். இந்தப்பணம் அப்படி சுககாரணமா துக்க காரணமா? சக்கிரவர்த்திக்கு துக்கமில்லையா? நமது ராஜா துக்கப்படவில்லையா? சக்கிரவர்த்தியாய்விட்டால் வியோகம் முதலியன உண்டாவது இல்லை என்று ஏதாவது நியமனம் உண்டா? நல்ல தர்மிஷ்டனிடத்தில் பணமிருந்தால் அவன் அதை ஸத்பாத்திரங்களிடத்தில் சிலவழித்து சிரேயஸ்ஸை அடைகிறான். விதர்மியிடத்தில் அது இருந்தால் அதனால் அநேக துஷ்கிருத்யங்களைச்செய்து பரஹிம்ஸை முதலானவைகளை நடத்தி கடைசியில் தானும் நசிக்கிறான். ஆகையால் ஸ்வத:தனத்திற்கு யாதொரு சுககாரணத்துவமும் கிடையாது என்று நிச்சயமாகிறது.

ஸ்ரீமத் ராமாயணத்தில் விசுவாமித்திர உபாக்கியானம் ஒன்று இருக்கிறது. விசுவாமித்திரர் வேட்டைக்காக வனத்திற்குச் சென்றார். அங்கே வஸிஷ்டர் மகாராஜாவுக்கு ஆதித்யம் (அதிதிபூஜை) செய்ததாகவும் அந்த ஆதித்யம காமதேனுவம்சத்தில் பிறந்த நந்தினி என்ற பசுவின் ஸகாயத்தால் செய்ததாகவும், அதைத்தனக்குக் கொடுக்கும்படி விசு

வாமித்திரர் யாசித்ததாகவும், வஸிஷ்டர் ராஜன் யாசிக்கக் கூடாதாதலால் மறுத்துவிட்டதாகவும், பலாத்காரமாய் நந்தினியைப் பிடிக்கப்போனதாகவும், அந்தப் பசு வந்து வஸிஷ்டரிடம் தங்களுடைய உத்திரவால் ஏற்பட்டதா என்று கேட்டதாகவும், இல்லை என்று தெரிந்துகொண்டு ஆக்ஞைபெற்று ரோமங்களில் இருந்து படைகளை சிருஷ்டிசெய்து சேனையை துவம்ஸம்செய்ததாகவும், அதைப்பார்த்துக்கோபித்து நாட்டிலிருந்து ஸைன்யங்களை அழைத்து வஸிஷ்டரை எதிர்த்ததாகவும், அவர் தண்டையூன்றிவிட்டு ஸமாதியிலிருந்ததாகவும், அந்த தண்டு ஸமஸ்த அஸ்திர சஸ்திரங்களையும் ஸாப்பிட்டதாகவும் கண்டிருக்கிறது. விசுவாமித்திரர் பார்த்தார். தனது ஸகல பலமும் வீணானதைக்கண்டு,

ब्रह्मतेजो बलं बलं धिक्क्षत्रियबलम् ।
एकेन ब्रह्मदण्डेन सर्वास्त्राणि हतानि मे ॥

चतुःसागरपर्यन्तां यो भुङ्क्ते पृथिवीमिमाम् ।
तुल्याश्मकाञ्चनोयश्च स कृतार्थो न पार्थिवः ॥ (विश्वामित्रः)

न जातु कामः कामानामुपयोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ॥ (विश्वामित्रः)

कामानभिलषन्मोहान्न नरः सुखमेधते ।
श्येनालयतरुच्छायां व्रजन्निव कपिंजलः ॥ ( „ )

என்று தனது க்ஷத்திரியபலத்தை நொந்து திக்கரித்துவிட்டு பிரம்மண்ணியத்தை ஸம்பாதிக்கவேண்டுமென்று தீர்மானித்து ஸகலராஜ்யத்தையும் விட்டுவிட்டு தபசுக்குப்போனார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவருக்கு சுகம் ராஜ்யம் இருந்தபோது வந்ததா? தபசு செய்து பிரம்மரிஷிப் பட்டம் பெற்றபோது வந்ததா? அவரைக்கேட்டால்தான்

பிரம்மண்ணியத்தின் பிரதாபம் தெரியும். இந்தக் காலத்தில் பிரம்மண்ணியத்தை எப்படியாவது நீக்கிக்கொண்டு பணம் ஸம்பாதிக்கப் பிரயத்தினம் படுகிறார்கள். ஏதோ பாச்சாத்தியர் வியாபாரம்பண்ணி ஸம்பாதித்திருப்பதால், நாமும் வியாபாரம் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கிறோம். பணத்தாலா சுகம் வரும்? அல்லது ராஜ்யத்தாலா சுகம் வரும்? நிவிருத்திமார்க்கத்திலா சுகம் அல்லது ஸதா பிரவர்த்தியிலா?

नस्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शान्तिः अशान्तस्य कुतः सुखम् ॥

எப்பொழுதும் வியவஹாரத்திலேயே இருக்கமுடியுமா? அதிப் பிரேமைபோடு வளர்த்திய குழந்தையையும் வேறு வேலையிலிருக்கும்பொழுது தூரவிலக்கிவிடுகிறதில்லையா? ஸதா பேச்சுப் பேசும் மனிதன்கூட சிறிதுநோம் சும்மா இருக்கின்றதில்லையா? மனம் விச்ராந்தி அடையவேண்டாமா? வியவஹாரம் எப்பொழுதாவது சுகஸாதனமாகுமா? ஏதோ ஆசை ஏற்பட்டது, அதைத்தீர்க்க ஏற்பாடு செய்தால் அது சுகமாகுமா? ஆசையின் சாந்திக்காகச் செய்த சிகித்ஸையேதவிர வேறல்ல. அது சுகமல்ல. ஜ்வரம் இருந்தது, ஔஷதத்தால் சமனம் அடைந்தது. துக்கசமனம் ஏற்பட்டது அவ்வளவுதான், சுகஸாதனம் அல்ல. இதைப்பற்றி பின்னால் சொல்லுவோம். ஆகையால் எல்லாருக்கும் சுகஸாதனத்தைக்காட்டும் வேதமே பிரமாணம். பணம் சுகஸாதனமல்ல என்பது ஸ்திரமாகிறது.

संतोषामृततृप्तानां यत्सुखं शान्तचेतसाम् ।
कुतस्तत् ध्यानलुब्धानामितश्चेतश्च धावताम् ॥ (गौतमः)

असन्तोषः परं दुखं सन्तोषः परमं सुखम् ।
सुखार्थी पुरुषस्तस्मात् सन्तुष्टः सततं भवेत् ॥ (गौतमः)

மேலும் பணம் இருந்தால் நான்குபேர்கள் வருகிறார்கள். பணம் போனால் அவர்களும் போய்விடுகிறார்கள். இந்தத் தனம் வந்தால் லோபம்கூட வருகின்றது. அத்துடன் துவேஷாதி ஸகல தோஷமும் வந்துவிடும்.

लोभः प्रज्ञानमाहन्ति प्रज्ञाहन्ति हताह्रियम् ।
ह्रीर्हता बाधते धर्मं धर्मो हन्ति हतः श्रियम् ॥

இந்தமாதிரி லோபம் வந்தபோது ஸகலமும் நஷ்டமாகிறது என்பது சாஸ்திர ஸித்தம். இந்த தனத்தைப்பற்றி ஸ்ரீ பகவத்பாதாள் வெகு அழகாய்ச் சொல்லி இருக்கிறார்கள்.

धनं भयनिबन्धनं सततदुःखसंवर्धनं
प्रचण्डतरकर्दनं स्फुटितबन्धुसंवर्धनम् ।
विशिष्टगुणबाधनं कृपणधीसमाराधनं
न मुक्तिगतिसाधनं भवति नापि हृच्छोधनम् ॥

இப்பேற்பட்ட தனத்தை ஏன் ஸம்பாதிக்கவேண்டும்? நம்மவர்களை ஜெயித்து ஆஸ்தி சேர்த்து பாச்சாத்தியர் கஷ்டப்படுகிறார்கள். வியாபாரம் செய்கிறார்கள்; அதனால் பணம் தேடுகிறார்கள். இவர்களைவிட யாராவது ஸாமர்த்தியம் செய்துவிட்டால் அந்த வியாபாரம் போய்விடுகின்றது. நாமும் வாங்காமல் இருக்க ஏற்பாடுகள் செய்கிறோம். அப்புறம் என்ன செய்கிறது? இதற்கு ஓய்வு இல்லை.

ஆகையால் ஆசார்யாள் உங்களுக்கு லோபமென்பதே தெரியாது; நான் சொல்லிக்கொடுக்கிறேன் என்று சொல்லுகிறார்கள். अर्थस्य प्राप्तौ संरक्षणं लोभः ॥ ஆகையால் எப்பொழு

தும் பணத்தை விடாமல் காக்கவேண்டும். நாம் ஸம்பாதித்த ஸொத்தை எப்பொழுதும் விடாமல் இருக்க முடியுமோ? இருந்தால் பிள்ளைகளோ ஞாதிகளோ எடுத்துக்கொள்வார்கள். मृतोऽपि न त्यजामि என்றபடி இறந்தாலும் விட்டுவிடாமல் தலையில் கட்டிய பணமூட்டைபோல் வரவேண்டுமே. அது என்ன? புண்ணியம் தான்.

சாகிற காலத்தில் எதை நினைத்துக்கொண்டிருக்கிறோமோ அதின்படிதான் ஜன்மமுண்டாகிறது என்பது நமது ஸித்தாந்தம். இதற்கு ஸாக்ஷியம் அஜாமிளோபாக்யானம். நாராயணன் என்று தனது பிள்ளையை அந்தியகாலத்தில் கூப்பிட்டதற்காக அஜாமிளனுக்கு ஸ்வர்க்கம் கிடைத்ததாகச் சொல்லி இருக்கின்றது. இதேமாதிரி ஏதோ ஒரு தார்க்கிகன் नित्यं पीलवः पीलवः என்று சொல்லிக்கொண்டு இறந்தானும். இதெல்லாம் லோபத்திற்கு திருஷ்டாந்தமாகும். அதே மாதிரி ஒரு கிருபணன் தான் ஸம்பாதித்ததை யெல்லாம் பூமியில் புதைத்துவிட்டு சொல்லாமல் இறந்துவிட்டான். வைத்தியனைக் கூப்பிட்டு மிருதஸஞ்ஜீவினியை பிரயோகித்து மூன்று வார்த்தை சொல்லிவிக்க மூவ்வாயிரம் ரூபாய் கொடுத்து செத்துப்போன பிதாவுக்கு ஸஞ்ஜீவினியை போட்டினார்கள். அவன் கண் விழித்த ஸமயத்தில் கன்றுக்குட்டி விளக்குமாற்றைத் தின்றுகொண்டிருந்ததால், வியர்த்த செலவைத் தடுக்க முயல்வதிலேயே அவனுக்கு பெரிய ஸம்ஸ்காரம் ஏற்பட்டிருந்ததால் முழித்ததும், "கன்றுக்குட்டி விளக்குமாறு தின்கின்றது" என்று சொன்னதும் வாய் மூடிற்று. பையன்களுக்கு பணம் இருக்குமிடம் சொன்னாலும் அவர்களுக்கு பிரயோஜனமாய் இருக்கலாம். அல்லது ராம, ராம, கிருஷ்ண கிருஷ்ண, சிவ சிவ என்று சொல்லி இருந்தாலும், இவனுக்குப் பிரயோஜனமாய் இருக்கலாம். இரண்டுமில்லா

மல் நிஷ்பிரயோஜனமாய்ப் போய்விட்டது. அந்தமாதிரி லோபபுத்தி இல்லாமல், ஸத்பாத்திரங்களைக் கண்டவிடத்து தனத்தை வழங்கிப் புண்ணியத்தைச் ஸம்பாதிக்கிறவன் தான் லோக த்வயத்திலும் அழியாத தனத்தைப் பெறுகிறான்.

பணத்தை பாங்கில் போடுகிறார்கள். பாங்கு அழிந்து விடலாம் அர்பத்னட் மாதிரி. அல்லது நாமே இல்லாமல் போய்விடலாம். அல்லது விடுமுறையாய் இருக்கலாம். அல்லது இந்த நாணயம் நாம் போய் இருக்கும் அந்த தேசத்தில் செலாமணியாகாமல் இருக்கலாம். அப்படிக்கல்லாமல் ஸர்வேசுவரனுயும், நித்யனுயும் இருக்கிற ஜகதீசுவரனிடத்தில் போட்டால், இந்த ஜகம் முழுவதும் ஸர்வேசுவரனுடைய ராஜ்யமானதால், பலன் நமக்கு எங்கும் எப்பொழுதும் கிடைக்கின்றது. ஆகையால் தனம் சுகஸாதனம் ஆகிறதில்லை. நல்ல விவேகமிருந்தால் ஆகலாம். இல்லாவிட்டால் அனர்த்தகாரியென்று முன்னமேயே சொன்னோம். விவேகம் தான் சுககாரி என்று ஸித்தமாகிறது.

இரண்டு பேர்கள் ஒரேமாதிரி வாசிக்கிறார்கள்; இரண்டு பேரும் பரீக்ஷைக்குப் போகிறார்கள். ஒருவன் தேறுகிறான்; மற்றவன் இல்லை. ஏன்? இரண்டு பரிசிரமங்களையும் எடுத்துக் கொண்டால் வித்யாஸமே இல்லை. பரீக்ஷையில் தேராதவனே கொஞ்சம் ஜாஸ்தியாய் வியாஸங்கம் செய்திருக்கலாம். அப்படி இருந்தும் ஏன் அவன் தேரவில்லை? ஈசுவரானுக்கிரஹம் இல்லை என்று ஏற்படுகிறது, “धनात् धर्मं ततः सुखम्” என்றபடி.

ஒரு மனிதன் வியாபாரம் செய்கிறான். லாபம் கிடைத்துக்கொண்டே வருகிறது. திடீரென்று கோடிக்கணக்காய் நஷ்டம் வந்துவிடுகின்றது. இதற்கென்ன காரணம்? வியா

பாரவிஷயத்தில் அதிக பரிசயம் இல்லாதபோது லாபம் வருவானேன்? வியாபாரத்தில் நைபுண்யம் வந்தபிறகு நஷ்டம் வருவானேன்? ஸாதகஸாமக்ரீகள் இருக்கும்போது எப்படி நஷ்டம் வந்தது? அதிக பிரயத்தனத்தால் பலன் அதிகமாய் வரவேண்டியிருக்க நஷ்டம் ஏன் வந்தது? லாபம் வந்த காலத்தில் தெய்வஸஹாயம் இருந்தது. இப்பொழுது இல்லை என்றுதான் சொல்லிக்கொள்ளவேண்டியிருக்கிறது. சிலர் ஸ்வாமி பிரார்த்தனை செய்துக்கொள்ளுகிறதும் இதை நிரூபிக்கின்றது. ரோகிகள் இரண்டு பேர்களுக்கு ஒரே விதமான வியாதி; ஒரே வைத்தியன், ஒரே மருநதைக் கொடுக்கிறுன். ஒருத்தன் பிழைக்கிறுன், மற்றவன் இறக்கிறுன். இது ஏன்? அவன் தலையெழுத்து என்கிறோம். ஒருவன் மருந்தில்லாமலே பிழைக்கிறுன். அதே வியாதியில் மற்றவன் ஸர்வ பிரயத்தனப்பட்டும் இறக்கிறுன். இதற்கென்ன சொல்வது? இவனுக்கு ஆயுசு பகவான் கொடுத்தது இவ்வளவுதான் என்று திருஷ்டமில்லாத ஒரு பிரமாணத்தை ஒத்துக்கொள்ளவேண்டி வருகிறது. புண்ணிய பாபங்கள் தான் சுகதுக்கஸாதனம் என்பது தெரிகின்றது.

இந்தக்காலத்தில் சந்தியாவந்தனம் செய்வது பாபமாக வந்துவிட்டது. ஏதோ சிலர் சேர்ந்து தங்கள் மேன்மைக்காக எழுதிவைத்துக்கொண்டிருப்பதாகச் சிலர் எழுதியிருக்கிறுர்களாம். சிலர் வேதம் பிறந்து இத்தனை வருஷம் ஆச்சுது என்கிறுர்களாம். ருக்வேதம்தான் பழயது. அதன் சைலியைப்பார்த்தால் அப்படித் தோன்றுகின்றது. என்று சொல்லுகிறுர்களாம். ஒரே மனிதன் ஒரேவிதமாய்த்தான் எழுதமுடியுமா? பதினெட்டுபுராணத்தை எழுதின வியாஸர் ஒரேவிதமாய் ஒரே சைலியில் எழுதியிருக்கிறுரா? தேவீபாகவதம் வெகு ஸரளமாய் இருக்கிறது. ஸ்ரீமத் பாக

மல் நிஷ்பிரயோஜனமாய்ப் போய்விட்டது. அந்தமாதிரி லோபபுத்தி இல்லாமல், ஸத்பாத்திரங்களைக் கண்டுவிட்டது தனத்தை வழங்கிப் புண்ணியத்தைச் ஸம்பாதிக்கிறவன் தான் லோக துவயத்திலும் அழியாத தனத்தைப் பெறுகிறான்.

பணத்தை பாங்கில் போடுகிறார்கள். பாங்கு அழிந்துவிடலாம் அர்பத்னட் மாதிரி. அல்லது நாமே இல்லாமல் போய்விடலாம். அல்லது விடுமுறையாய் இருக்கலாம். அல்லது இந்த நாணயம் நாம் போய் இருக்கும் அந்த தேசத்தில் செலாமணியாகாமல் இருக்கலாம். அப்படிக்கல்லாமல் ஸர்வேசுவரனும், நித்யனும் இருக்கிற ஜகதீசுவரனிடத்தில் போட்டால், இந்த ஜகம் முழுவதும் ஸர்வேசுவரனுடைய ராஜ்யமானதால், பலன் நமக்கு எங்கும் எப்பொழுதும் கிடைக்கின்றது. ஆகையால் தனம் சுகஸாதனம் ஆகிறதில்லை. நல்ல விவேகமிருந்தால் ஆகலாம். இல்லாவிட்டால் அனர்த்தகாரியென்று முன்னமேயே சொன்னோம். விவேகம் தான் சுககாரி என்று ஸித்தமாகிறது.

இரண்டு பேர்கள் ஒரேமாதிரி வாசிக்கிறார்கள்; இரண்டு பேரும் பரீக்ஷைக்குப் போகிறார்கள். ஒருவன் தேறுகிறான்; மற்றவன் இல்லை. ஏன்? இரண்டு பரிசிரமங்களையும் எடுத்துக் கொண்டால் வித்யாஸமே இல்லை. பரீக்ஷையில் தேராதவனே கொஞ்சம் ஜாஸ்தியாய் வியாஸங்கம் செய்திருக்கலாம். அப்படி இருந்தும் ஏன் அவன் தேரவில்லை? ஈசுவரானுக்கிரஹம் இல்லை என்று ஏற்படுகிறது, "धनात् धर्म ततः सुखम्" என்றபடி.

ஒரு மனிதன் வியாபாரம் செய்கிறான். லாபம் கிடைத்துக்கொண்டே வருகிறது. திடீரென்று கோடிக்கணக்காய் நஷ்டம் வந்துவிடுகின்றது. இதற்கென்ன காரணம்? வியா

பாரவிஷயத்தில் அதிக பரிசயம் இல்லாதபோது லாபம் வருவானேன்? வியாபாரத்தில் ஸகபுண்யம் வந்தபிறகு நஷ்டம் வருவானேன்? ஸாதகஸாமக்ரீகள் இருக்கும்போது எப்படி நஷ்டம் வந்தது? அதிக பிரயத்தனத்தால் பலன் அதிகமாய் வரவேண்டியிருக்க நஷ்டம் என் வந்தது? லாபம் வந்த காலத்தில் தெய்வஸஹாயம் இருந்தது. இப்பொழுது இல்லை என்றுதான் சொல்லிக்கொள்ளவேண்டியிருக்கிறது. சிலர் ஸ்வாமி பிரார்த்தனை செய்துக்கொள்ளுகிறதும் இதை நிரூபிக்கின்றது. ரோகிகள் இரண்டு பேர்களுக்கு ஓரே விதமான வியாதி; ஓரே வைத்தியன், ஓரே மருந்தைக் கொடுக்கிறான். ஒருத்தன் பிழைக்கிறான், மற்றவன் இறக்கிறான். இது என்? அவன் தலையெழுத்து என்கிறோம். ஒருவன் மருந்தில்லாமலே பிழைக்கிறான். அந்த வியாதியில் மற்றவன் ஸர்வ பிரயத்தனப்பட்டும் இறக்கிறான். இதற்கென்ன சொல்வது? இவனுக்கு ஆயுசு பகவான் கொடுத்தது இவ்வளவுதான் என்று திருஷ்டமில்லாத ஒரு பிரமாணத்தை ஒத்துக்கொள்ளவேண்டி வருகிறது. புண்ணிய பாபங்கள் தான் சுகதுக்கஸாதனம் என்பது தெரிகின்றது.

இந்தக்காலத்தில் சந்தியாவந்தனம் செய்வது பாபமாக வந்துவிட்டது. ஏதோ சிலர் சேர்ந்து தங்கள் மேன்மைக்காக எழுதிவைத்துக்கொண்டிருப்பதாகச் சிலர் எழுதியிருக்கிறார்களாம். சிலர் வேதம் பிறந்து இத்தனை வருஷம் ஆச்சுது என்கிறார்களாம். ருக்வேதம்தான் பழயது. அதன் சைலியைப்பார்த்தால் அப்படித் தோன்றுகின்றது. என்று சொல்லுகிறார்களாம். ஓரே மனிதன் ஓரேவிதமாய்த் தான் எழுதமுடியுமா? பதினெட்டுபுராணத்தை எழுதின வியாஸர் ஓரேவிதமாய் ஓரே சைலியில் எழுதியிருக்கிறாரா? தேவீபாகவதம் வெகு ஸரளமாய் இருக்கிறது. ஸ்ரீமத் பாக

வதம் இரும்பு கடலேயாய் இருக்கின்றது ; வியாக்கியானம் வைத்துப்பார்த்தாலும் அர்த்தமாவது கடினமாய் இருக்கின்றது. ஒரே மனிதன் பல சைலியில் எழுதமுடியாதா ? ஒருவன் ஒரே வியாஸத்தில் பலசைலியில் எழுதுகின்றதில்லேயா ? இந்தக் கேள்விகளுக்கு அவன் என்ன பதிலுரைக்க முடியும் ? போகட்டும் இந்த ரிஷிகளுக்கு இந்த உன்னத பதவி எப்படி வந்தது ? அவர்கள் ஜீவர்களா ? அல்லது ஈச்வரர்களா ? ஈச்வரர்கள் அல்ல என்று சொல்ல நமக்கு ஆக்ஷேபணையில்லே ஏனென்றால், பல ஈச்வரர்கள் இருக்க முடியாததலாலும், ஒரே ஈச்வரன்தான் உண்டு ஆனதாலும், நாமே வேதம் ஈச்வரனால் செய்யப்பட்டது என்று சொல்வதாலும், நமக்கு ஆக்ஷேபம் இல்லே. ரிஷிகள் ஜீவர்களானல் அவர்கள் எந்த வேதத்தை நம்பி பிரயத்தனப்பட்டு இந்த ரிஷித்துவத்தை அடைந்தார்கள். அவர்கள் ஆராதித்த வேதசாஸ்திரம் ஒன்று இருக்கவேண்டுமல்லவா ? இதனுலேயே வேதம் அனுதி என்று ஸித்தமாகவில்லேயா ? அவர்கள் ஸர்வக்ஞர் என்றால் நமக்கேன் வரவில்லே ? நாமேன் கிஞ்சிக்ஞராய் இருக்கின்றோம் ? அவர்கள் எந்த சாஸ்திரத்தை அனுசரித்து எந்த பிரயத்தனம் பண்ணினர்கள் ? அந்தப் பிரயத்தனம் என்ன ? நாம் வேறு என்ன செய்துக்கொண்டிருக்கிறோம் ? அவர்கள் பகவானுடைய அனுக்கிரஹம் பெற்றவர்கள் என்றால் நமக்கேன் அது வரவில்லே ? நல்ல மார்க்கத்தைக்கண்டார்கள் என்றால் நமக்கேன் அந்த மார்க்கம் தெரியவில்லே ? சாஸ்திரார்த்தம் தெரிந்ததால் என்றால், எந்த சாஸ்திரார்த்தம் அவர்களுக்குத் தெரிந்தது ? அந்த சாஸ்திரமோ சாஸ்திரங்களோ அவர்களுக்கு முன்னதாய்த்தானே இருந்திருக்கவேண்டும். சாஸ்திரம் தெரியவேண்டுமோ அல்லவோ அவர்களுக்கு. அப்படி ஒத்துக்கொண்டால்

வேதம் ரிஷிகளால் செய்யப்பட்டது என்பது எப்பொழுதும் ஒத்துக்கொள்ளமுடியாதது. தர்மாதர்ம வியவஸ்தை வேத மூலமாய்த்தான் தெரியவேண்டியிருக்கிறது. வேதார்த்தம் தெரிந்துகொண்டு நமக்குச்சொல்லி இருக்கிறார்கள். அதை ஸ்மிருதி புராணங்களில் விளக்கி இருக்கிறார்கள். ஆகையால் தான் வேதசாஸ்திரங்கள் பிரமாணம் என்பது ஏற்படுகிறது.

சாஸ்திரத்தில் சொன்னபடி நடந்தால்தான் சுகம். இல்லாவிட்டால் துக்கம் நிச்சயம். வர்ணாசிரமதர்மப்படி நடந்தால் சுகம் கிடைக்கும். பாபத்தை நீக்கிக்கொள்ளவேண்டியது. தர்மத்தை ஸம்பாதித்துக்கொள்ளவேண்டியது.

மற்ற பிரமாணங்களைப் பார்க்கிலும், சாஸ்திர பிரமாணத்திற்கு ஒரு சிரேஷ்டத்துவம் உண்டு. பிரத்யக்ஷம் தப்பும், ரோகாதி பீடைகளினால்; ஊஹையும் தவறிப்போம், ஸதூஹ துரூஹபேதமிருப்பதால்; சப்தமும் தப்பும் அனாப்தசப்தமானால். ஆனால் நிர்தோஷனான ஸர்வேச்வரனால் செய்யப்பட்ட வேதசாஸ்திரம் தப்பாது. என்? ஸ்வத: பிரமாணமாதலால். இந்த லோகத்தில் கூட சுகம் சம்பாதிக்கலாம். வித்யாரண்யர் ஸ்வர்ணவர்ஷம் வரவழைத்த கதை ஸகலருக்கும் தெரியலாம். ஆகையால் வேதசாஸ்திர பிரமாணத்தை நம்பி, ஸகல ஆஸ்திகஜனங்களும் வர்ணாச்ரம அனுஷ்டானப்படி நடந்தால் சுக பிராப்தியும், துக்க நிவர்த்தியும், அடைவார்கள் என்பது ஸித்தம்.



# III

பிரபவ-ஞு ஆனி-மீ 1-உ (ஸௌம்யவாரம்).

15—6—1927.

நேற்று வேதசாஸ்திரம்தான் பிரமாணம். மற்ற மூன்று பிரமாணமும் வைஷம்யமாயும், ஸதோஷமாயும் இருக்கலாம், இது மட்டும் தோஷரஹிதமாய் இருக்கிறது என்று சொல்லப்பட்டது. எப்படி ஜன்மாந்தரம் உண்டு என்பதிலிருந்து வேதம் பிரமாணம் என்று ஒத்துக்கொண்டோமோ அப்படியே அதிலிருந்து சுகம் துக்கம் என்று இரண்டும், அதை அனுபவிக்கும் காரணமும் தெரியப் பெற்றோம். இந்த சுகப்பிராப்தி, துக்கநிவர்த்தியிலேயே இருந்து, ஈசுவரன் ஒருவன் உண்டென்றும் தீர்மானமாகிறது.

நாஸ்திகன் இல்லையென்கிறான். प्रत्यक्षाभावात्. ரிஷிகள் ஈசுவரனை பிரத்யக்ஷமாய்க் கண்டதாக சாஸ்திர புராணங்களில் சொல்லி இருக்கிறதே என்றால், அவர்கள் ஸத்கர்ம பலத்தால் மனசு நிர்மலமாகி ஈசுவரனை பிரத்யக்ஷீகரித்துக் கொண்டார்கள் என்றுதான் தோன்றுகிறது. துருவன் தன் தகப்பனார் மடியில் போய் உட்காரப்போனதாயும், இளைய தாயார் சுருசியென்பவள் தனது மகன் இருக்கவேண்டிய இடத்தில் உட்காரக்கூடாது என்று தள்ளிவிட்டதாகவும், உடனே அவன் பகவத் தர்சனம் செய்யாமல் வருவதில்லையென்று வனத்துக்குப் போய் ஸ்திரமாய் உட்கார்ந்துக் கொண்டுவிட்டதாயும், அங்கே நாரதர் வந்து வாஸுதேவ துவாதசாக்ஷரீ மஹாமந்திரத்தைச் சொல்லிக்கொடுத்ததாகவும், அந்த மந்திரஜபத்தால் பகவான் பிரஸன்னமானதாகவும் நாம் படித்திருக்கிறோமல்லவா? இந்த தபசுக்குச்

சென்றபோது துருவனுக்கு வயது ஐந்து. ஜன்மாந்தரத்தில் தபசு பண்ணி மனதை நிர்மலமாக்கிக்கொண்டு, இந்த ஜன்மத்தில் துருவன் ஈசுவரனை பிரத்யக்ஷமாகக் கண்டான். அதே புரச்சரணாதி கர்மாக்களை செய்தால், நாமும் பிரத்யக்ஷம் செய்துக்கொள்ளலாம்.

நமக்கு ஈசுவரன் பிரத்யக்ஷமல்ல என்பது ஸரிதான். ஆனால் நாஸ்திகன் சொல்லுகிற மாதிரி அல்ல. அவன் இந்த சர்மசக்ஷுஸ்ஸுக்குத் தெரியாவிட்டால் ஈசுவரன் இல்லை என்று சொல்லிவிடுகிறான். அது தப்பு என்று நாம் சொல்லுகிறோம். இந்த சர்மசக்ஷுஸ்ஸுக்களுக்கு வேத்யன் அல்லதான் பகவான். இந்த இந்திரியங்களால் அதீந்திரியனான பகவானைப் பார்க்க முடியாது. அதனால்தான் பகவான் பகவத்கீதையில்,

न तु मां शक्यसे द्रष्टुं अनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥

என்று சொன்னதிலிருந்தே திவ்ய சக்ஷுஸ்ஸுக்கு மாத்திரம் வேத்யன் என்றும், ஞானக்கண்ணாலேயேதான் அறியப்படுகிறவன் என்றும் தெரிகிறது. ஞானவேத்யனான பகவானை ஞானத்தினாலேயேதான் அறியவேண்டும். ஸ்ரீ சங்கராசார்யாள் சங்கரவிஜயத்தில் சுரேசுவராசார்யாளுக்கு உபதேசிக்கும்போது இப்படி சொல்லி இருக்கிறார்கள் :

आराधितं दैवतमिष्टमर्थं ददाति तस्याधिगमो गुरोः स्यात् ।
नोचेत् कथं वेत्तुमीश्वरोऽसौ अतीन्द्रियं दैवतमिष्टदं नो ॥

ஆராதிக்கவேண்டிய ஈசுவரனை நாம் குருமூலமாய்த் தெரிந்து கொள்ளவேண்டியிருக்கிறது. நாமாகவே தெரிந்துகொள்ள

முடிகிறதில்லை. ஏன்? அதீந்திரியனாய் இருப்பதினாலே. ஸகல ஞானத்திற்கும் குருதான் காரணம். கேவலம் 'சச்சிதானந்தம்' என்றால் என்ன தெரிகிறது? ஒன்றும் தெரிகிறதில்லை. அதற்காகத்தான் விக்ரஹம் முதலியன வைத்து, பெரிய பெரிய கோவில்கள் கட்டி அவிடத்தில் விசேஷ ஸாந்நித்யமுள்ள தேவதா பிரதிஷ்டைகளைச் செய்து பகவத் பிரஸாதத்தை அடையும்படி ஏற்பாடு செய்திருக்கிறது. இப்பொழுதுங்கூட அந்த க்ஷேத்திரங்களில் மஹா வியாதிகள் எல்லாம் நீங்குகிறதை நாம் கண்டதில்லையா? பக்தி இருந்தால் க்ஷேமம் கிடைக்கின்றது. இல்லாவிட்டால் கிடைக்கிறதில்லை. இதையெல்லாம் நமக்கு யார் சொல்லிக் கொடுத்தார்கள்? குருதான். முதல் முதல் சொல்லிக்கொடுத்த குரு மாதா, அதனால்தான் சுருதியில் मातृ देवो भव, पितृ देवो भव பிறகு आचार्य देवो भव என்று சொல்லி இருக்கிறது. எது எது நாம் அறிந்துகொண்டிருக்கிறோமோ, அது எல்லாம் ஒரு குரு மூலமாய்த்தான் வந்திருக்கின்றது. இந்த குருஸ்தானத்திற்கு ஜாதிபேதம் முதலியன கிடையாது. எவன் குரு என்றால் சிஷ்யனுக்கு ஹிதமான மார்க்கத்தைக் காட்டுகிறவன்தான் குரு. ஸரியான மார்க்கத்தைக் காட்டுகிறவன் குரு

**को गुरुरधिगततत्त्वः शिष्यहितायोद्यतः सततम् ।**

என்று பிரச்னோத்தர ரத்நாவளியில் சொல்லி இருக்கிறது. சிஷ்யனுடைய யோக்யதானுஸாரமாய்ச் சொல்லிக்கொடுக்கிறவன்தான் குரு. அதனால்தானே முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு முதலிய பிரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. கேவலம் நிர்குண பிரம்மத்தைப் பற்றிப் பேசி அதன் ஸ்வரூபம் ஸச்சிதானந்தம் என்றால் என்ன தெரிந்துகொள்ள

முடிகிறது ? ஒன்றும் புலப்படுகிறதில்லை. ஏதோ ஒரு மூர்த்தியைக் கற்பித்துக்கொடுக்கவேண்டித்தான் இருக்கின்றது. ஸர்வ வ்யாபகனாய் இருக்கிறான் என்றால் எப்படித் தெரிகிறது ? அதற்காக ருத்ரமூர்த்தியையோ, விஷ்ணுமூர்த்தியையோ, அல்லது வேறே எதாவது ஒரு மூர்த்தியையோ ஏற்படுத்திக்கொண்டு ஆராதனம் செய்து சித்தைகாக்ர்யம் கிடைத்தமேல், மேலான படிகளுக்குப் போக முடியும். அப்பொழுது தான் ஸர்வ வியாபகத்துவத்தைச் சொல்லிக் கொடுத்தால் தெரியும். லௌகிகமாயும் அப்படித்தான், சிறு குழந்தைகளுக்கு அக்ஷராப்யாஸம் செய்விக்கும்போது முதல் முதல் மணலில் எழுதச் சொல்லிக் கொடுக்கிறார்கள். பிறகு புளியங்கொட்டையால் அப்படியே அடுக்கிவைத்து பழக்குகிறார்கள். பிறகு ஓலையைக் கொடுத்து எழுதச் சொல்லுகிறார்கள். பிறகு எழுத்துக்கள் முக்தாபலங்கள்போல் ஸரியாகின்றன அல்லவா. முதல் முதல் ஸ்தூல எழுத்தாக எழுதி பிறகு செவ்வையாக சின்ன எழுத்தாய் எழுதுகிறான் அல்லவா ? அப்படியேதான் பகவானுடைய ஸூக்ஷ்ம ஸ்வரூபம் தெரியுமுன் ஸ்தூலமாய் மூர்த்தி செய்துக்கொண்டு பிறகு பதே பதே ஸூக்ஷ்ம தர்சனம் உண்டாகும். ஸ்தூலபுத்திக்கு ஸ்தூலக்கிரஹண சக்திதான் உண்டு. இப்பொழுதும்கூட சக்கிரவர்த்திக்குப் பட்டம் கட்டினால், கிரீடதாரணம் செய்தால், படத்தை அலங்கரித்து உத்ஸவம் கொண்டாடுகின்றதில்லையா ? இதனால் ராஜப்ரீதியை ஸம்பாதிக்கிறதில்லையா ? அதேமாதிரி ஸர்வேசுரன் தன்னை ஆராதிப்பவர்களுக்கும் அனுக்கிரஹம் செய்கிறார். லௌகிக ராஜாக்களுக்குத் தந்தி மூலமாய் நாம் மஹோத்ஸவம் கொண்டாடினதாகத் தெரிவிக்கவேண்டும். ஸர்வேசுவரனுக்கு அதொன்றும் வேண்டியதில்லை.

**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।**
**भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥**

என்றபிரகாரம் அவன் ஸதா நமது ஹிருதயகமலத்தில் இருப்பதால் அவனுக்கு நாம் அவனை ஆராதித்ததாகத் தெரிவிக்க வேண்டியதில்லை. அந்த சிரமம்கூட நமக்குக் கிடையாது.

மேலும் ராஜாவினுடைய ஸேவையில் சில ஸமயங்களில் அவனை ஏமாற்றிவிடலாம்; இன்றைக்குச் செய்யவேண்டிய வேலையை நாளைக்குச் செய்து இன்றைக்குச் செய்ததாகவே காட்டிவிடலாம். ஈசுவரன் அப்படியல்ல. ஸகல சங்கதிகளையும் அறிந்துகொள்ளுகிறான். ஆகையால் நாம் விக்கிரஹங்கள் மூலமாய்ச் செய்யும் பூஜையை அவன் தெரிந்து கொண்டு, நமக்கு சிரேயஸ்ஸைக் கொடுக்கக் காத்துக் கொண்டிருக்கிறான். நமது ஆராதனத்துக்குத் தகுந்தபடி பலனை நமக்குக் கொடுக்கிறான்.

இந்த ஆராதனை வழிமுறைகளை எல்லாம் நாம் எப்படித் தெரிந்துகொள்ளுகிறது? எல்லாவற்றையும் குருமுகத்திலிருந்துதான் அறியவேண்டும். நமக்கு ஒவ்வொரு காரியமும் யாராவது முன்னால் செய்துகாட்டிய பிறகேதான் நாம் அந்தக்காரியத்தைச் செய்யப் பழகிக்கொள்ளுகிறோம். அல்லது ஒருவன் செய்துகாட்டின அனுபவத்தைக்கொண்டு நாம் காரியங்களைச்செய்கிறோம் அல்லவா?

இந்த குருமூலகமான வித்தை நாஸ்திகனுக்கு உண்டாகிறதில்லை ஏன்? அவனுடைய அஹங்காரத்தால். அவன் தானே தனது சுபபுத்தியால் சகலத்தையும் கண்டுபிடித்து விடலாம் என்று எண்ணுகின்றான் அல்லவா? அவன்தான் பிரத்யக்ஷத்தைத் தவிர மற்ற பிரமாணத்தை ஒத்துக்கொள்

ளுகிறதில்லையே! அவனிடத்தில் விக்கிரஹத்தைப்பற்றி பேசினால் ஏதோ கட்டுக்கதை என்றுதானே சொல்லுவான். ஈசுவரன் அப்பிரத்யக்ஷன். ஆகையால் அவனைப்பார்க்காமல் ஏற்படுத்திய இந்த மூர்த்த ரூபங்கள் எல்லாம் வீண் கல்பனைகள் என்று சொல்லுகின்றான். அவனோ ஈசுவரனே இல்லை என்று சொல்லுகின்றவன். ஏன்? 'नास्ति ईश्वरः प्रत्यक्षाविषयत्वात्' ஈசுவரன் இல்லை பிரத்யக்ஷமல்லாததால் என்பவன். இப்படி இவன் சொல்லிவந்ததைப் பார்த்து அவன் மீது தயை பிறந்து, அவனுக்கு புத்தி கற்பிக்க உத்தேசித்து, ஈசுவரனை பிரார்த்தித்து அந்த நாஸ்திகனுக்கு பிரத்யக்ஷமாகும்படி கேட்டுக்கொண்டதின்மேல் அப்படியே ஈசுவரன் பிரத்யக்ஷமானாலும், நாஸ்திகன், இவன் ஈசுவரன் அல்ல ஈசுவரனாய் இருந்தால் பிரத்யக்ஷமாகுமா? नायमीश्वरः प्रत्यक्षविषयत्वात् இவன் ஈசுவரன் அல்ல. நீங்கள் ஏதோ வேஷதாரியைக்கொண்டுவந்து நிறுத்தி இருக்கிறீர்கள் என்று சொல்லுவான்.

முன்னால் பிரத்யக்ஷமல்லாததால் ஈசுவரன் இல்லையென்றான். இப்பொழுது பிரத்யக்ஷமாய் இருப்பதால் ஈசுவரன் அல்ல என்கின்றான். இவனை என்ன செய்கிறது? இப்பேர்ப்பட்டவர்களை வேதபாஹ்யர் என்று தீர்மானித்து அவர்களுக்கு ஒன்றும் சொல்லிக்கொடுக்கக்கூடாது என்று பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்கள். இவர்கள்தான் ஸகலமும் தெரியுமென்று அஹங்காரம் கொண்டிருக்கிறார்களே!

துர்யோதனனுக்கு ஸ்ரீ பகவானே போய் உபதேசம் செய்தும் கேட்டானா? நம்மவர்களில் சிலருக்கு பகவான் சொல்லி இருக்கிறார் என்றாலே போதும். அவர்கள் அதன்படி நடக்கத்தயாராய் இருக்கிறார்கள். சாக்ஷாத் பகவானே வந்து சொல்லியும் அதற்கு விருத்தமாய் நடக்கவில்லையா

அவன் ? ஸமபாகத்திற்கு யோக்யராய் இருந்தாலும், பிக்ஷாடனம் க்ஷத்திரியர்களுக்கு தர்மம் அல்லாததால், ஐந்து கிராமங்கள்தானே தர்மபுத்திராதிகள் கேட்டார்கள்? அவன் கொடுத்தானா ?

ஒன்றும் தெரியாதவன் பாதகம் இல்லை. அவன் சொன்னதைத் தெரிந்துகொண்டு அதனால் கிருதார்த்தத்தை அடைகிறான். நன்றாய்த்தெரிந்தவனுக்கோ ஒன்றும் சொல்லிக்கொடுக்கவேண்டியதில்லை. உபதேசம் செய்யவேண்டும் என்கிற சாஸ்திரவழக்கப் பிரகாரம் காட்டவேண்டியதைத்தவிர வேறில்லை. ஆனால் கொஞ்சம் தெரிந்தும் அதிகம் தெரிந்ததாக நினைத்துக்கொண்டிருக்கிறவனுக்குச் சொல்லிக்கொடுக்கவே முடியாது. இதைப்பற்றித்தான் பர்த்ருஹரி

अज्ञः सुखमाराध्यः सुखतरमाराध्यते विशेषज्ञः ।
ज्ञानलवदुर्विदग्धं ब्रह्मापि नरं न रञ्जयति ॥

என்று சொல்லியிருக்கிறார்.

நாஸ்திகன் சொல்லுகிறபடி, ஈசுவரன் இந்த சர்ம சக்ஷுஸ்களுக்கு வேத்யன் அல்லதான். ஞானசக்ஷுஸ்ஸாலேயே அவனை அறியவேண்டுமென்று முன்னமேயே சொல்லியாயிற்று. அப்படியானால் ஈசுவரனை எப்படி அறியலாம் என்றாலோ குருமூலகமாய்த்தான் அறியலாம்.

ஈசுவரன் உண்டென்பதற்கு நம்ம பெரியவர்கள் அநேகம் யுக்திகள் சொல்லி இருக்கிறார்கள்.

1. நாம் முன்னமே ஒத்துக்கொண்டபிரகாரம் வேதம் பிரமாணமாதலால், வேதத்தில் ஈசுவரன் உண்டு என்று தீர்மானமாய்ச்சொல்லி இருக்கின்றது. வேதத்தில் தர்மாதர்மம்

சொல்லி இருக்கிறது. அந்த தர்மாதர்மம் அதீந்திரியம். அதீந்திரியத்தை, அறிந்தவர்கள்தானே சொல்லக்கூடும். வேதத்தை ரிஷிகள் எழுதிவைத்தார்கள் என்றால், அவர்கள் ஸ்வர்க்கலோகத்தைப்பற்றி எழுதியிருக்கிறார்கள். அதை எழுதினது ஸ்வர்க்கலோகத்திற்குப் போனபிறகா முந்தியா? வேதத்தில் ஜ்யோதிஷ்டோமாதி க்ரதுக்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறது ஸ்வர்க்கம் போவதற்கு. இதை எப்படிக்கண்டு பிடித்தார்கள்? ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களைச்செய்த முன்னென்றால் இந்த யாகத்தைச் செய்தால் ஸ்வர்க்கம் கிடைக்குமென்று சொன்ன சுருதி முன்னமே இருக்கவேண்டுமல்லவா? ஸ்வர்க்கம்போனபிறகு என்றால் அவர்கள் எந்த வழியில் ஸ்வர்க்கம் போனார்கள்? அவர்கள் போன வழி போதுமே நமக்கும். இந்த யாகம் நமக்குமட்டும் என்னத்திற்கு? இப்பேற்பட்ட அநேக உபபத்திகள் வருவதினால் வேதத்தை ரிஷிகள் செய்தார்கள் என்று சொல்லமுடிகிறதில்லை. அவர்கள் கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கவேண்டும். வேதப்பிரமாணத்தைத் தவிர இதர பிரமாணத்தால் செய்தார் என்றால் அநவஸ்தை ஏற்படும். எப்படி என்றால் இந்த ரிஷிக்குச்சொன்ன ரிஷி ஒருத்தர் வேண்டும். அவருக்கு மற்றொருவர். அப்படியே போய்க்கொண்டிருக்கும். ஏன்? தர்மாதர்மம் அதீந்திரியமானதாலும், ஜீவனுக்கு அக்ஞானம் சேர்ந்திருப்பதினாலும், அவனால் செய்யப்பட்டிருக்கமுடியாது. ஆகையால் வேதம் அபௌருஷேயமாகி, ஈசுவரனால் செய்யப்பட்டது என்று ஒத்துக்கொள்ளவேண்டும். அந்த வேதத்தில் ஈசுவரன் உண்டென்று சொல்லியிருக்கிறது. வேதத்தைச் செய்தான் என்பதால் ஈசுவரன் உண்டென்றும் வேதத்தில் சொல்லி இருப்பதால் ஈசுவரன் உண்டென்றும் ஸித்தமாகிறது.

2. மனுஷ்யனுக்குச் சுகதுக்கம் இருந்துகொண்டே இருக்கின்றன. ஆனால் இரண்டும் நித்யமாய் இருக்கிறதில்லை. சுகம் இருக்கும்போது துக்கம் இல்லை. துக்கம் இருக்கும் போது சுகம் இல்லை. இவ்விரண்டும் எப்படி வந்தன ? எப்படிப் போயின ? தானாய் வந்தன என்று சொல்வதற்கில்லை. ஏன் என்றால், சுகமோ துக்கமோ எப்பொழுதும் வந்து கொண்டிருக்கட்டுமே ! ஏன் அப்படிக்கில்லை ? இதற்குக்காரணம் புண்ணியம் பாபம். திருஷ்டாந்தமாக பிரஹ்லாத சரித்திரத்தை எடுத்துக்கொள்வோம். அவனுடைய தகப்பனார் அவனுக்கு அநேக ஹிம்ஸைகளைச்செய்தார் என்று சொல்லி இருக்கின்றது. மலைமேலிருந்து கீழே உருட்டச்செய்தார், காளகூடவிஷத்தை ஊட்டச்செய்தார், யானையால் மிதிக்கடித்தார், பாம்புகளால் கடிப்பிவித்தார், இப்படிபகுபிரகாரமாய் ஹிம்ஸை செய்தும் அவனுக்கு துக்கம் உண்டாகவே இல்லை. ஏன் ? பாபமே கிடையாது என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. பகவத்பக்தி விசேஷமாய் இருந்தது.

அதேமாதிரி ஸதாசிவ பிரம்மேந்திரர்களைப்பற்றி ஒரு சரித்திரம் உண்டு. அவர் ஸதா பிரம்மநிஷ்டராய் அவதூத ஆச்ரமியாய் பிராரப்தம் தள்ள அவருடைய தேஹம் போய்க்கொண்டிருந்தது. ஸதா ஈசுவர த்யானத்தில லயித்த புத்தியுடன் இருந்ததால் இங்கு போகவேண்டும், அங்கு போகக்கூடாதென்ற இஷ்டம் அவருக்குக்கிடையாது. அப்படி போய்க்கொண்டிருக்கிற காலத்தில் ஓர் யவனராஜா (நவாப்) வேட்டைக்காகக் காட்டில் தனது ஸ்திரீகளுடன் இருக்கும் கூடாரத்தில் நுழைந்துவிட்டார். அதை அவன் கண்டு வெகு கோபங்கொண்டு அவருடைய பாகுவைச் சேதம் செய்துவிட்டான். பாகுச்சேதம் செய்ததுகூடத் தெரியாமல் அப்படியே போய்க்கொண்டிருந்தார். இதைக்கண்டு

அதிசயித்துப் பின்தொடர்ந்துசென்று உபதேசம் பெற்ற தாகக் கேட்டிருக்கிறேம். பாகுச்சேதம் செய்தும் துக்கம் வாராததற்குக் காரணம் என்ன? ஒரு சிறு முள் தைத்தா லும் எவ்வளவோ துக்கம் அனுபவித்துக் கத்த ஆரம்பித்து விடுகிறேம். அப்படி இருக்க பாகுச்சேதம் செய்தும் ஏன் துக்கம் வரவில்லை?

ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ।

என்றபடி ஸர்வ பாபமும் போய் இருப்பதால் துக்கமே கிடையாது. நமக்கெல்லாம் யாதொரு காரணமும் இல்லா மல் திடீரென்று சுகம் வருகின்றது, அல்லது திடீரென்று துக்கம் வந்துவிடுகின்றது. ஒரு காரணமும் தெரிகிறதில்லை. இப்படி சுகதுக்க பிராப்தி ஏற்படுவானேன்? காரண மென்ன? மூலிகை தோண்டப்போனவிடத்தில் பெரிய தனம் அகப்படுகின்றது. தனம் இருக்கிறதென்று தோண்டப் போகிறுன், பாம்பு கடித்து இறந்துபோகிறுன். இதெல்லாம் எப்படி உண்டாகிறது? ரிஷிகள் எல்லாம் பிரம்மாநந்தம் அ னுபவித்ததாகச் சொல்லியிருக்கிறது எப்படி? சுகஸாதனத் திற்குப் புண்ணியம் என்றும், துக்கசாதனத்திற்குப் பாபம் என்றும் ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. கர்மாவின் பலன்தான் இவையெல்லாம்.

அப்படியானுல் இந்தப்பலன் எப்படி வந்தது? கர்ம மே கொடுத்ததா? அல்லது நாமாக எடுத்துக்கொண்டோ மா? அல்லது யாராவது கொடுக்கிறுரா? கர்மம் கொடுக்க வில்லை. ஏனென்றுல் அது ஜடம். சேதனசக்தி இல்லை அ தற்கு. மேலும் ஜலதாடனம் முதலிய நிஷ்பலமான கர்மாக் கள் இருக்கின்றனவே, அதற்கென்ன சொல்வது? தவிர

காட்டு இலாகா உத்தியோகஸ்தனுக்குப் பதிலாக வேறு ஒரு வன் ஸரியாக கணக்கு எழுதிவைத்தால் அதனால் அவனுக்கு பலன் கிடைக்குமோ, சம்பளம் கிடைக்குமோ? அது எப்படி உண்டாகாதோ அதுபோல் கர்மமே பலத்தைக் கொடுக்காது. கொடுக்க முடியாது. கர்மம் பலனைக்கொடுக்கிறதென்றால் ஈசுவரனே வேண்டியதில்லை. இந்தக் காலத்தில் எதற்கும் முன்னால் பிராம்மணன் நிற்கின்றான். உத்தியோகத்திற்காக பாடுபடுகிறான். அதனால் மற்றவர்கள் துக்கப்படுகின்றார்களாம். வேலையா சம்பளம் கொடுக்கின்றது? முடியாது. ராஜா ஒருத்தன் வேண்டும். அதனால்தான் ஒருத்தன் இறந்தவுடன் மற்றொரு ராஜாவை நியமிக்கிறார்கள்.

போகட்டும், கர்மம் பலனைக் கொடுக்கிறதில்லை என்று ஒப்புக்கொண்டுவிட்டால் சுகதுக்கம் எப்படி வருகிறது? நாமே வாங்கிக்கொள்ளுகிறோம் என்று சொல்லிவிடலாமா? நாமே வாங்கிக்கொண்டோமென்றால், நாம் துக்கத்தை வாங்கிக்கொள்ள இஷ்டப்படுவோமோ? ஒருக்காலுமில்லை. அப்படியாயின் உலகத்தில் துக்கமில்லாமலே போயிருக்காதா? நம்மைச் சுற்றிலும் துக்கமயமாய் இருப்பதைப் பார்க்கிறோமே! துக்கமோ ஸர்வதா ஸர்வத்ராளுக்கும் அநிஷ்டம்தானே! நல்லதையே ஏன் வாங்கிவிடப்படாது? இந்தக்கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்ல உபயோகமாக இன்னொருவன் வேண்டும். அவன்தான் பகவான்; ஈசுவரன். ஆகையால் सर्वकर्मफलदातृत्वेन. எல்லா கர்மங்களுக்கும் பலன் கொடுப்பதற்காக ஈசுவரன் ஒருத்தன் ஸித்தமாகி இருக்கவேண்டும்.

நல்ல மார்க்கத்தில் போனால் பகுமானமும், கெட்ட காரியம் செய்தால் தண்டனையும் ஏற்படுவது நியாயம்தானே. என்? நல்ல மார்க்கத்தில் போகும்படி தூண்டவும் கெட்ட

மார்க்கத்தில் போகாமல் இருக்கும்படி தடுக்கவும் தானே பகுமான சிக்ஷைகள் ஏற்பட்டிருக்கின்றன.

लालनाद्बहवो दोषाः ताडनाद्बहवो गुणाः ।
तस्मात्पुत्रं च शिष्यं च ताडयेन्न तु लालयेत् ॥

என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பையனைத் தகுந்தபடி சிக்ஷித்தால் விருத்திக்கு வருகிறான். இல்லாவிட்டால் கெட்டுப்போகிறான். எல்லோருக்கும் தெரிந்த கதை ஒன்று உண்டு.

ஒரு சிறுவன் சிறு சிறு வஸ்துக்களாய்த் திருடித் தாயாரிடம் கொடுத்துவந்து பிறகு பெரும் திருட்டு செய்து அகப்பட்டுக்கொண்டான். அப்பொழுது நியாயஸ்தலத்தில் நிறுத்தப்பட்டு கடும் தண்டனை விதிக்கப்பட்டான். அப்பொழுது அவன் தனது தாயாரைப் பார்க்கவேண்டுமென்று கேட்டதாகவும், ஸமீபத்தில் அவள் வந்தபோது, ஏதோ ரகசியம் பேசுவதுபோல், காதின் கிட்டப்போய், அவள் காதை நன்றாய்க் கடித்துத் துண்டித்துவிட்டான். ஸமாசாரம் என்னவென்று விசாரித்தபோது, இவள் என்னை சிறு திருட்டின்போதே கண்டித்திருந்தால், இந்தப் பெரும் ஆபத்தில் சிக்கி இருக்கமாட்டேன், எனக்கு இளம் பிராயத்திலேயே தகுந்த சிக்ஷை விதித்திருந்தால் இந்தக் கதி எனக்கு வந்திருக்காது என்று சொன்னானும். அவனுடைய மனதைத் தெரிந்துகொண்டு மன்னித்துவிட்டார்களாம். ஆகையால் சிக்ஷை நமக்கு அவசியம். ஆனால் சிக்ஷை மனுஷ்யர்களுக்குத்தான். மிருகங்களுக்கில்லை. ஏதோ ஒரு புலி பிராம்மணனைத் தின்றுவிட்டதாகத் தெரிந்தால் அந்தப் புலிக்கு சிக்ஷை செய்கிறது எங்கேயாவது கேட்டதுண்டோ? இல்லையே! மனுஷ்யனுக்கு சிக்ஷை விதித்தால் அவன் திரும்பி

நல்ல மார்க்கத்திற்குப் போவான். ஈசுவரன், நாம் திரும்பி நல்ல மார்க்கத்தை அவலம்பிக்கச் செய்வதற்காகக் கொடுக்கும் சிக்ஷைதான் துக்கம். அவன் செய்யும் பகுமானம்தான் சுகம்.

நம்மவர்களிற் சிலர் ஸந்த்யாவந்தனம் செய்வதினால் என்ன பலன் என்று கேட்கிறார்களாம். இதை மட்டும் கேட்கக் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். தாங்கள் செய்யும் காரியங்களுக்கு பலன் சொல்ல முடியுமா இவர்களால்? வீண் பேச்சுப் பேசிக்கொண்டிருக்கிறார்களே, அதற்கு என்ன பலன்? ஏதோ விருத்தாந்தப் பத்திரிகை வாசிக்கிறார்களே அதற்கு என்ன பலன்? அதில் எழுதுவது தொண்ணூற்று ஒன்பது பொய். ஏதோ ஒரு பத்திரிகை அச்சடிக்கும்போது பத்து பந்திவரை பாக்கி இருந்ததாம். அச்சடிக்கிறவன் ஸம்பாதகனை என்ன செய்வது என்று கேட்டபோது, இந்தக் குளத்தில் ஒரு பிராம்மணன் விழுந்து இறந்துவிட்டான் என்று அச்சடிக்கச் செய்தானும். அப்படி எழுதியும் மூன்று பந்திகள் பாக்கி இருப்பதைக் கண்டு, அப்படி முதலில் கேள்விப்பட்டோம், பிறகு தீர விசாரித்ததில் அது பொய்யென்று கேட்டு ஸந்தோஷிக்கிறோம், என்று எழுதச் சொன்னானும். இப்படி இந்த வீண் விருத்தாந்தப் பத்திரிகை வாசிப்பதில் என்ன பிரயோஜனம்?

**वृत्तस्य सर्वकर्मणः अन्तः नाशः वृत्तान्तः** ஸ்வகர்மத்தை நாசம் செய்கிற பத்திரிகை என்று அர்த்தம் செய்தால் வாஸ்தவமாகும். இந்த வீண் காலக்ஷேபத்தால்தானே நமக்கு ஸந்த்யாவந்தனத்துக்குங்கூட அவகாசம் கிடைக்கிறதில்லை.

ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு தர்மம் உண்டோ இல்லையோ? நமக்கு மூன்று தரம் ஸந்த்யா சொல்லி இருக்கின்றது.

துலுக்கனுக்கு ஐந்து தரம் நமாஸ் செய்யும்படி சொல்லப் பட்டிருக்கிறது. அதைக் காலாகாலத்தில் அவன் செய்கிறானே இல்லையோ ? அதேமாதிரி நாமும் செய்யவேண்டாமோ ?

ஒரு தாசில் உத்தியோகம் என்று வைத்துக்கொள்வோம். வேலையைச் செம்மையாய்த் தெரிந்துகொண்ட பிறகு, மற்றக் காரியத்தை எல்லாம் குமஸ்தாக்களுக்கு ஒப்புவித்துவிட்டாலும், கையெழுத்தாவது போடவேண்டுமல்லவா? அதேமாதிரி நமது பிராம்மண்ணியம் போகாமல் இருக்க ஸந்த்யாவந்தனமாவது செய்யவேண்டும் என்று குறைச்சலாய்க் கடைசி வார்த்தையாகச் சொல்லி இருக்கிறது. மந்திரார்த்தம் தெரிந்துகொண்டு செய்தால் यदेव विद्यया करोति श्रद्धया उपनिषदा तदेव वीर्यवत्तरं भवति என்று சொல்லியிருப்பதால் அதிக பலனுடையதாகுகிறது. "वीर्यवत्तरं भवति." ஸந்த்யா வந்தனத்தில் பலம் என்னவென்று கேட்டபோது, அதற்கு பதிலும் சொல்லவேண்டுமல்லவா ? அந்த பதில் ஸங்கல்பத்திலேயே இருக்கின்றது. उपात्त दुरितक्षयद्वारा श्री परमेश्वर प्रीत्यर्थम् என்று சொல்லி இருக்கின்றது. நம்முடைய பூர்வ பாபம் போனால் ஈசுவரப்ரீதி உண்டாகிறது. பாபம் போகவேண்டுமென்கிற லக்ஷ்யம், ஈசுவர ப்ரீதி பலம். ஈசுவர ப்ரீதியைவிட வேறு என்ன சிரேஷ்ட பலம் லோகத்தில் உண்டு ? ஸாதாரண பிரபுக்களை ஆச்ரயித்தால் எவ்வளவோ பலம் கிடைக்க, ஈசுவரனையே ஆராதித்தால் பலன் கிடைப்பதில் என்ன ஸந்தேகம் ? ஈசுவர அபராதம் செய்தால் பாபம் வருகின்றது. மன்னிப்புக் கேட்கவேண்டாமா ? सूर्यश्च, यदह्नात् இத்யாதி மந்திரங்களால் அன்றுடம் செய்த பாபங்களைப் போக்கடிக்கின்றோம் ; சுத்தமடைகிறோம்.

பலமே இல்லை என்று வைத்துக்கொள்வோம். மதவிஹிதம். ஆகையால் செய்யவேண்டாமா ? அதைச் செய்தே

தீரவேண்டும். தவிர பலமும் உண்டு. எத்தனையோ கர்மாக்கள் பிராம்மணர்களுக்குச் சொல்லப்படுகிறது, ஔபாஸனம், அக்னிஹோத்ரம் முதலியன. கடைசியாய் சந்த்யாவந்தனம் விடாவிட்டால் பிராம்மண்யம் நிற்கிறது. ஸகல சிரேயோபூதமான இந்தப் பிராம்மண்ணியத்தைக் காக்க வேண்டும். பிராம்மண்ணியத்தில் என்ன குணமென்றால் விசுவாமித்திரரைக் கேட்டால் சொல்லுவார். வீணாகவா தனது ராஜ்யம் முழுவதையும் விட்டுவிட்டுக் காடு வந்து சேர்ந்தார்? பிராம்மணர்களுக்கு இந்த லௌகிக சுகங்கள் லக்ஷ்யமில்லை. நாம் நமது விதிப்படி நடந்தால் நமது தேஹ யாத்திரைக்கு வேண்டிய ஸௌகர்யங்களைக் கொடுக்க ஈசுவரன் ஸித்தனாய் இருக்கிறான்.

தேஹத்தைத் தண்டித்து நமக்கு சுக காரகமாய்ச் செய்துக்கொள்ளவேண்டாமா? வஸிஷ்டர் சொல்லுகிறார்.

ब्राह्मणस्य देहोऽयं नोपभोगाय कल्प्यते ।
इह क्लेशाय महते प्रेत्यनन्तसुखाय च ॥

பிராம்மணனுடைய இந்த தேஹமானது போகத்திற்காக ஏற்பட்டது அல்ல. இந்த லோகத்தில் மிகவும் துக்கத்திற்கு ஆளாக்கி முடிவில்லாத சுகத்தை அடைய ஏற்பாடு செய்யத் தானே இந்த பிராம்மண சரீரம் ஏற்பட்டிருக்கிறது. சரீரத்தால் கஷ்டப்படாமல் நமக்குக் கிடைக்கிற சுகமே கிடையாது. வித்யாப்யாஸம் எவ்வளவு கஷ்டம்? கஷ்டத்தால்தான் சுகம் கிடைக்கின்றது. தனத்தாலா சுகம் கிடைக்கின்றது? இல்லவே இல்லை. சக்கிரவர்த்திக்குத் துக்கமில்லையா? இவர்கள் எல்லாம் அனுபவியாத சுகத்தை மனதின் ஸந்துஷ்டியினால் பிராம்மணன் அனுபவிக்கலாமே. நம்ம பெரியவர்கள் எல்லாம் எப்படி மரியாதை பெற்றார்கள்? அவர்

களிடம் தனம் இருந்ததா? முன்னமே எல்லாரும் பிராம்மணனை மதித்து வரவில்லையா? இப்பொழுதும் ஸரியான இடங்களில் மதிக்கிறார்கள். முழுவதும் போய்விடவில்லை. முழுவதும் இல்லாமலும் இல்லை. ஸந்திக்தமாய் இருக்கின்றது. சாஸ்திரம் சொன்னபடி நடந்தால் இப்பொழுதும் நமக்கு மரியாதை உண்டாகும் என்பதில் ஸந்தேஹமில்லை. "कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति" என்று பகவான் சொல்லுகிறார். பகவானை நம்பினவர் ஒருநாளும் கெடமாட்டார்கள். குசேலனுக்கு என்ன சொத்து இருந்தது? பிராம்மணன் தன் கர்மத்தைச் செய்துகொண்டிருந்தால் நிச்சயம் அவனுக்கு சுகம் உண்டாகிறதென்பதில் ஸந்தேஹமில்லை.

ஆனால் இப்பொழுது பிராம்மணர்களுக்கு காயத்ரீயில் வைமுக்யம் எப்படி வந்தது என்றால் அதற்கும் காரணம் சொல்லப்பட்டிருக்கிறது. தேவீபாகவதத்தில் (விஷ்ணுபுராணத்திலும் சொல்லி இருக்கிறதுபோல் தோன்றுகிறது) இதைப்பற்றி ஒரு விருத்தாந்தம் இருக்கிறது. மஹா துர்பிக்ஷத்தில் எல்லா ரிஷிகளும் கௌதம ஆச்ரமம் போய் அவரைச் சரணம் அடைந்தார்கள். அப்பொழுது அவர் தனது காமதேனுவினால் அவர்கள் அத்தனை பேர்களுக்கும் அன்னம் கொடுத்து ரக்ஷித்துவந்தார். இதனால் அவருடைய கீர்த்தி எங்கும் பரவியது. இந்தக் கீர்த்தியை, அவரால் துர்பிக்ஷகாலத்தில் ரக்ஷிக்கப்பட்ட ரிஷிகளுக்கே பொறுக்க முடியவில்லை. இவருக்கு ஏதாவது குற்றம் வரும்படி செய்ய வேண்டுமென்று அவர்கள் யோஜனை செய்தார்கள். கௌதமருக்கு பசுவினிடத்தில் பரம ப்ரீதி, பரம பக்தி உண்டு. எந்தப்பசுவைக் கண்டாலும் அதைத் தடவிக்கொடுத்து, பிரதக்ஷிணம் செய்யாமல் போகமாட்டார். இதை அறிந்த அந்த அசூயை நிறைந்த ரிஷிகள் தங்கள் தபோபலத்தால்

ஒரு பசுவை சிருஷ்டித்து, இவர் தொட்டதும் கீழே விழுந்து இறந்துபோகும்படியாய்ச் செய்து நிறுத்தினார்கள். அப்படியே வழக்கம்போல் கௌதமர் தடவிக்கொடுத்துப் பிரதக்ஷிணம் செய்ததும், அந்தப் பசு கீழே விழுந்து இறந்தது. ஸகல தேவதாத்மகமான கோ இறந்ததைக் கண்டு நிரம்ப துக்கப்பட்டு, இதன் காரணமென்னவென்று தனது யோக திருஷ்டியால் பார்த்தார்; சங்கதி தெரியவந்தது.

இவ்வளவு தன்னிடத்தில் லாபம் அடைந்தும், ஒரு அபராதமும் செய்யாத தன்னிடத்தில் இவ்வளவு கிருதக்னதையைச் செய்த இந்த ரிஷிகளை எப்படி சிக்ஷித்து மேலான பதவிக்குக் கொண்டுவருகின்றது என ஆலோசித்தார். க்ருதக்னே நாஸ்தி நிஷ்க்ருதி: என்று சொல்லி இருப்பதால் பிராயச்சித்தம் ஒன்றும் தோன்றவில்லை. அவர்களுக்கு சாபம் கொடுத்தார். எந்த தெய்வ பலத்தால் அவர்களுக்கு இந்த சிருஷ்டி சக்தி ஏற்பட்டதோ அந்த தெய்வத்தினிடத்தில் வைமுக்யமும், திரும்பி சிரேயஸ்ஸை அடைய அந்த காயத்திரீயையே சரணமடையும்படிக்கும், சபித்து, அவர்களையெல்லாம் கலியுகத்திலே ஜன்மம் எடுக்கும்படி சாபமோக்ஷமும் சொல்லிக் கொடுத்தார். நமக்கு இப்பொழுது காயத்திரியில் சிரத்தை இருந்தால் ஸரி. இல்லாவிட்டால் நாமெல்லாம் கௌதம சாப கிரஸ்தர்கள் என்று தீர்மானித்துக்கொள்ளவேண்டியது.

எவர்கள் தன்னை பஜிக்கிறார்களோ அவர்களை ரக்ஷிப்பதால்தான் அந்த தெய்வத்திற்கு காயத்ரீ என்று பெயர். காயந்தம் த்ராயதே இதி காயத்ரீ. இப்பேற்பட்ட காயத்திரீக்கு என்ன பலம் என்று கேட்கிறார்கள்? என்ன பலம் இல்லை என்றல்லவோ கேட்கவேண்டும். பாபமே செய்கிறது, பாபப்பிரதிக்கிரியை ஒன்றும் செய்கிறதில்லை. சுகம் எப்படி வரும்?

துக்கம்தான் குடிகொண்டிருக்கும். அன்ன சுத்தம் கிடையாது. ஸாப்பிடுவதோ நாய்சேஷம், ஸ்திரீசேஷம், பர்யுஷிதம் முதலிய ஸகல தோஷத்தோடுகூடின அன்னங்களே. மற்றும் இதர அபோஜ்ய அபேயங்களைப்பற்றிப் பேசவேண்டியதில்லை. இப்படி இருந்தால் என்ன சுத்தி ஏற்படும்? **आहारशुद्धौ सत्त्वशुद्धिः** அல்லவா? இந்த நியமம் தப்பிப் போனதால்தான் நம்மை ஒருவரும் கௌரவப்படுத்துகிறதில்லை. ஈசுவரனுல் கொடுத்த அதிகாரம் போதாதா? ராஜாவும் கொடுக்கவேண்டுமா?

நமது கர்மாக்களைச் செய்துகொண்டு, நமக்குத்தெரிந்ததைச் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தால், நம்மை யார்தான் மதிக்காமல் இருக்கமுடியும்? வெறுமனே மூக்கைப் பிடித்துக்கொண்டிருந்தால் என்ன வந்துவிடும்? சம்பளம் என்ன கிடைக்கும் என்று கேட்கலாம். சம்பளம் என்னத்திற்கு? நித்ய ஸந்துஷ்டனுய்க் கிடைத்ததைக்கொண்டு திருப்தியடைந்தால் சுகமா? எவ்வளவு கிடைத்தாலும் போதாமல் வேணும்வேணும் என்று இருப்பதில் சுகமா? அது பரம தரித்திர திசையல்லவோ? சூத்திரன் செய்கிற கருமத்தையே செய்கிறது, அவன் வீட்டிலேயே சாப்பிடுகிறது, இன்னும் அவனும் செய்யத்துணியாத காரியங்களைச் செய்தால், அவனுக்கு நம்மிடத்தில் எப்படி பக்தி உண்டாகும்? நல்லவேளையாய் நம்முடைய குற்றங்களை எடுத்துக் காட்ட அவன் ஆரம்பித்தது நமமுடைய க்ஷேமம். குற்றம் நம்மிடத்தில் கண்டுபிடிப்பவன் நமக்கு வெகு நல்ல மித்திரன். நாம் செய்த குற்றம் அவன் வாயால் தொலைந்தது ஒன்று, நாமும் திருந்தலாம் இரண்டு. நம்முடைய தோஷத்தை யார் சொல்லுகிறுரோ அவர் நமது தாயாரைவிட சிரேஷ்டர் என்று சொல்லி இருக்கிறது. தாயார் தேஹரக்ஷ

ணம் மாத்திரம் செய்கிறாள், இவர் பாபத்தைப் போக்கி புண்ணிய மார்க்கத்தையும் காட்டிக்கொடுக்கிறதுபோலாகிறது. இதைவிட மேலான உபகாரம் என்ன இருக்கிறது? அவனுடைய எண்ணம் எப்படி வேணுமென்றாலும் இருக்கட்டும், நமக்கு நல்லதாகத்தானே ஏற்படுகிறது?

वयमपि परितुष्टा वल्कलैस्त्वं दुकूलैः
समधिक परितोषः निर्विशेषो विशेषः ।
स तु भवतु दरिद्रो यस्य तृष्णा विशाला
मनसि च परितुष्टे कोर्थवान् को दरिद्रः ॥ (भर्तृहरिः)

अपमानात्तपोवृद्धिः सम्मानात्तपक्षयः ।
अर्चितः पूजितो विप्रो दुग्धा गौरिव गच्छति ॥

अमृतस्येव तृप्येत अपमानस्य योगवित् ।
विषवत् जुगुप्स्येत सम्मानस्य सदा नरः ॥

இப்பொழுதுதான் இந்த அகௌரவம் வந்திருக்கின்றது. முந்தி இருந்ததோ, இந்த நவநாகரீகம் வந்தமேல்தானே இப்படி ஏற்பட்டிருக்கிறது? இந்த நவீன பரிஷ்காரத்திற்குப் பிறகுதானே மழை இல்லை! ஸஸ்யாதிகளின் விலை அதிகமாய்ப் போய்விட்டது. முன்னவர்களுக்கு எல்லாம் ஸலீஸாய்க் கிடைத்தது. இப்பொழுது ஏன் உண்டாகவில்லை? முன்னவர்கள் எல்லாம் பசுக்கள் என்றல்லவோ நினைத்தோம். அவர்களுக்கு ஒன்றும் தெரியாது, நாம்தான் இந்த நவபரிஷ்காரத்தால் ரொம்ப ஶிலாகனீயத்தை அடைந்தோம் என்று கர்வம் கொண்டிருக்கிறோம். இப்பொழுது தெரிகின்றது எவர்கள் பெரியவர்கள் என்று. அவர்கள் ஸதா ஸந்தோஷிகளாய் இருந்தார்கள். எப்பொழுதும் சுகம்

அனுபவித்தார்கள். ஸகலரும் அவர்களை ஸம்மானித்தார்கள். சாஸ்திரத்தில் சொல்லியபடி நாம் நடந்தால், நமக்கும் ஸகலமும் கிடைக்கும்.

இதற்கு ஒரு கதை கேட்டிருக்கிறோம். ஒரு பிராம்மணன் ஸதா ஈசுவரத்தியானம் செய்தால் தனது குடும்ப பரணத்தை ஈசுவரன் தாங்கிக்கொள்கிறான் என்று நம்பிக்கை வைத்து அந்தப்படியே தனது குடும்பத்தைப் பற்றி நினைக்காமல்

अनन्याश्चिन्तयंतो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥

என்று சொல்லியபடி நினைத்துக்கொண்டு உஞ்சவிருத்தி நடத்திவந்தான். ஈசுவரனுக்கு இவனைப்பரீக்ஷிக்கவேண்டுமென்று தோன்றி ஒரு தினம் ஒரு முஷ்டிகூடக்கிடைக்காமல் செய்துவிட்டான். ஒருதரம் போனான், கிடைக்கவில்லை. இரண்டு தரம் போனான், கிடைக்கவில்லை. மூன்றுதரம் போனான், கிடைக்கவில்லை. வீட்டுக்கு வந்ததும் அந்த சுலோகம் பொய் என்று தனக்கு நிரூபணம் ஆகிவிட்டதால், அதை எழுத்தாணிகொண்டு அடித்துவிட்டு மறுபடியும் நாலாம் தடவை பிச்சைக்குப்போனான். இதற்குள் ஜகதீசன் அந்த பிராமணனுடைய சிஷ்யனாக வேஷம் தரித்துக்கொண்டு ஒரு வஸ்திரத்தில அநேக முடிச்சாக அரிசி, பருப்பு, உப்பு, புளி முதலியன அன்றைக்கு வேண்டியதைமட்டும் கொண்டுவந்து அந்த பிராமணனுடைய பத்னியிடம் கொடுத்து சமைத்து வைக்கும்படி சொல்லிவிட்டுத் திரும்பிப் போய்விட்டான். நாலாம்தடவையும் பிராம்மணனுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. வெருங்கையோடு வீடுவந்ததும் வீட்டில் ஸகல ஸாமக்கிரிகளும் தயாராய் இருப்பதைக்கண்டு சமாசாரத்தை கேட்

டான். யாரோ ஒரு சிஷ்யன் வந்ததாகவும், அவன் கொடுத்ததாகவும் அவன் முதுகில் ஒரு பெரிய கிரல் ரக்தப்பிரவாகமாக இருந்ததாகவும் அவருடைய மனைவி சொன்னாள். ஈசுவரன் கொடுத்த முடிச்சு அக்ஷயமாகவே வந்துகொண்டிருந்தது. இதேமாதிரி குசேலோபாக்கியானம் கேட்டதில்லையா ?

ஒரு மகாபண்டிதன் ராஜஸபைக்குப்போய் இருந்த காலத்தில் அவனுடைய குத்ஸித வஸ்திரத்தைப்பார்த்து ராஜா சிறித்தானும். உடனே அந்தப் பண்டிதன்

वयमपि परितुष्टाः वल्कलैस्त्वं दुकूलैः
समधिग परितोषः निर्विशेषो विशेषः ।
स तु भवतु दरिद्रो यस्य तृष्णा विशाला
मनसि च परितुष्टे कोर्थवान् को दरिद्रः ॥

चतुः सागरपर्यन्तां यो भुङ्क्ते पृथिवीमिमाम् ।
तुल्याश्मकाञ्चनो यश्च स कृतार्थो न पार्थिवः ॥ (विश्वामित्रः)

என்று சொன்னானும். ஆசையிருந்தால் தரித்திரன், நிராசையாய் இருந்தால் சுகி. असन्तुष्टो द्विजो नष्टः என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் மனஸ்ஸந்துஷ்டி பிராமணனுக்குத்தான். மற்றவர்களுக்கு இல்லை. துஷ்டிதான் சுகம். அதனால்தான் புத்திவிசேஷம் கிடைக்கின்றது. ஏன் ? மனம் நிர்மலமானதால். பகவத் பஜனத்தால் நிர்மலமான மனது சிக்கிரத்தில் எதையும் பிடித்துக்கொள்ளுகிறது. இப்படி நிர்மலமான மனதை சம்பாதித்ததால் ஏற்பட்ட புத்தி விசேஷத்தை ஏன் மறுபடி துஷ்கிரியை செய்து மலினப்படுத்திக்கொள்ளவேண்டும் ? இதையெல்லாம் பிராம்மணர்களே தங்களுக்கென்று ஏற்படுத்திக்கொண்டார்கள் என்று சொல்

லிக்கொள்ளுகிருர்களாம். ஏன்? உலகத்தில் கிரந்தம் எழுதினவர்களெல்லாம் பிராம்மணர்களாய் இருப்பானேன்? மற்றவர்கள் எழுதுகிறதுதானே. பிராம்மணனே எப்படிச் செய்தான்? போகட்டும், அப்படி அவன் புகழே ஜாஸ்தியாய் இருக்கும் புஸ்தகங்களை ராஜாக்கள் என் பரவ அனுமதி கொடுத்தார்கள். க்ஷத்திரியன் தன்னையே பெரியவன் என்று எழுதிக்கொள்ளட்டுமே.

போஜசம்பு என்று கூறப்படும் ஒரு ராமாயண சம்பு இருக்கிறது. அதில் மங்களாசரணத்தில்

उच्चैर्गतिर्जगति सिध्यति धर्मतश्चेत्
तस्य प्रमा च वचनैः कृतकेतरैश्चेत् ।
तेषां प्रकाशन दशा च महीसुरैश्चेत्
तानान्तरेण निपतेत् क्वनु मत्प्रणामः ॥

என்று சொல்லியிருக்கிறது. தாத்பர்யம், மேலான கதி தர்மத்தால் என்றால், தர்மம் தெரிந்துகொள்ள வேதம் வேண்டும், வேதம் தெரிந்துகொள்ள பிராம்மணன் வேண்டும், அந்த பிராம்மணனைத்தவிர நான் வேறு யாரை நமஸ்கரிக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறது. இதை ஏன் அவன் அப்படி எழுதினான்? இது எல்லாம் காரணமல்ல. புத்தி விசேஷம் இருந்தது. ஞானவிசேஷத்தால் சிரேஷ்டத்துவம் கிடைத்தது. அத்தனைதான். கொஞ்சம் அதிகமாய் ஜந்மாந்தரத்தில் ஸத்கர்மானுஷ்டானம் செய்த விசேஷத்தால் வந்தது இந்த புத்தி. ஆனால் இதனாலேயே நம்மவர்களில் மடையர்கள் இல்லையென்றாவது, மற்றவர்களிடத்தில் புத்திசாலிகள் இல்லையென்றாவது அர்த்தமில்லை. ஆனால் இந்த ஜாதியில் புத்திசாலித்தனம் அதிகமாய் இருப்பது எல்லாரும் ஒத்துக்கொண்டதே.

புத்தி பிரஸாதத்திற்கு ஸரஸ்வதி கடாக்ஷம் வேண்டும். அந்த கடாக்ஷம் இருந்தால் வருகிறது இல்லாவிட்டால் இல்லை. புத்தி இருந்தால் ஸகலத்தையும் ஸாதிக்கலாம்.

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु
बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च ।
इन्द्रियाणि हयान्याहुः विषयांस्तेषु गोचरान्
आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुः मनीषिणः ॥

என்று சொல்லியிருக்கின்றது. புத்தி ஸ்வாதீனமாய் இருந்தால் ஸகலத்தையும் கறறுக்கொள்ளலாம். துர்போஜனத்தால் அது கெட்டுப்போகும். எதனுல் ஸகலமும் அடையலாமோ அதையே கெடுத்துவிட்டால் கௌதமசாபம்போல், நமக்கு எது சிரேயஸ்ஸைக்கொடுக்கிறதோ அதையே நசிப்பித்ததாகும்.

இதற்கு ஒரு கதை உண்டு. அருணன் என்ற ஒரு ராக்ஷஸன் காயத்திரீ புரச்சரணம் செய்து ஸித்தி பெற்று தேவதைகளையெல்லாம் ஹிம்ஸித்துக்கொண்டிருந்தான். ஹிம்ஸை பொறுக்காமல் இந்திரன் தனது குருவாகிய பிரஹஸ்பதியிடம் தனது துக்கங்களைச் சொல்லிக்கொண்டான். தனது துக்கம் நிவாரணமாகும் வழியைப்பற்றிக் கேட்டான். யோஜித்துச் சொல்லுகிறேன் என்று சொல்லிவிட்டு, அருணண் வீட்டுக்குப் போனுர். அருணன் அவரை வரவேற்று "எது, விரோதியாகிய என்னிடத்திற்கு தாங்கள் வந்தது" என்று கேட்டான். "நீ எப்படி எங்கள் விரோதி ஆவாய்? எங்கள் இஷ்டதேவதையாகிய காயத்திரீயை நீயும் உபாஸிக்கிறபடியால் எங்களுக்கு நீ பரம மித்திரனல்லவா" என்றுர் பிரஹஸ்பதி. இதைக் கேட்டதும் அவனுக்குத் தனது

இஷ்டதேவதையான காயத்திரியின் மேல் சிரத்தை குறைந்தது. உடனே அவனுடைய பலமும் குறைந்தது.

இந்தமாதிரி கர்மபலத்தைக் கொடுக்க ஒரு ஈசுவரன் வேண்டுமென்று ஸித்தமாகிறது.

3. இப்படியே ஸகல ப்ரம்மாண்ட ஆதாரத்வேன ஈசுவரன் உண்டென்று நிச்சயிக்கலாம். காற்றடித்தால் தூளி பறக்கிறது. அந்த சிறு தூளியும் கீழே விழுந்துவிடுகிறது. இப்படியே மழைத் துளிகள் கீழே விழுந்துவிடுகின்றன. அப்படி இருக்கும்போது இந்தப் பிரம்மாண்டம் எப்படி விழாமல் இருக்கிறது? "वासुदेवस्य वीर्येण" என்று நமது சாஸ்திரம் சொல்லுகின்றது. ஸமுத்திரம் எப்படி அப்படியே நின்றுகொண்டு இருக்கின்றது? அதற்கு கரை என்ன இருக்கிறது? ஸத்யத்திற்கு ஸமுத்திரம் என்று சொல்லுகிறார்களே! நல்லகாலம், தர்மம் முதலியன இருந்தால் சுகமாய் இருந்துவருகிறோம்; அதர்மம் மேலிட்டால் ஸமுத்திரமே பொங்கி துவம்ஸம் செய்து விடுகின்றது. இதையெல்லாம் இருந்தபடி நிறுத்திவைத்தவர் யார்? அப்பேர்ப்பட்ட வஸ்து ஒன்று இருக்கவேண்டுமல்லவா? அவர்தான் ஈசுவரன்.

4. அதேமாதிரி ஸர்வ நியாமகத்வேன ஈசுவரன் உண்டு என்று நிரூபிக்கலாம். எல்லாவற்றையும் ஏற்படுத்தினவன் ஒருவன் இருக்கவேண்டுமல்லவா? ஈசுவரன் என்றால் நிர்பயனாய் இருக்கவேண்டும். லோக சக்கிரவர்த்தி இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் எப்பொழுதும் சாச்வதமாய் இருக்கிறாரா? அவருக்கு சத்ருபயம் இல்லையா? ரோக வியோகாதி துக்கங்கள் இல்லையா? சூர்யன் பிரதிதினம் கிழக்கே உதித்து மேற்கே அஸ்தமிப்பானேன்? அவன் யாருக்குப் பயந்து யாருடைய உத்தரவின்பேரில்

தினம்பிரதி போய்க்கொண்டிருக்கிறுன்? ஜடமான பதார்த்தம் தானுகப் போகுமோ? அதிதூரத்தில் இருப்பதால் வர்துளாகாரமாய் இருக்கின்றது. தூரத்திலிருந்து மலையைப் பார்த்தால் நிரம்ப மிருதவாய் இருப்பதாய்த் தோன்றுகிறது. கிட்டப் போனுல் பண்ணும் முள்ளுமாய் இருக்கும். இந்தமாதிரி வர்துளாகாரமான சூர்யன் யாருடைய நியமனத்தின்பேரில் தினம் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறுன்? சூர்யன் உதிக்காமல் நின்றுவிட்டால் இந்த உலகம் அழியும் என்பது ஸித்தம் அன்றோ? அவன் யாருடைய உத்திரவுப்படி யாருக்குப் பயந்து நடக்கிறுன்? ஸகல ஜகத்திற்கும் பிரபுவான பகவானுடைய உத்திரவுப்படி என்று ஒத்துக்கொண்டு தீரவேண்டும். "भीपोदेति सूर्यः" என்று வேதத்தில் சொல்லி இருக்கிறது.

भीपास्माद्वातः पवते भीषोदेति सूर्यः ।
भीपादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चम इति ॥

இந்த ஸர்வேசுவரனுடைய ஸிக்ஷைதான் துக்கம்; அவருடைய பகுமானம்தான் சுகம்; நராளுக்குத்தான் சிக்ஷை; பசுக்களுக்கில்லை. பசுக்கள் பரர் காடுகளில் மேய்ந்தால் ஒரு இடத்தில் அதை அடைத்துவைக்க ஏற்பாடு செய்கிறுர்கள். இது பசுவுக்காகவா தண்டனை? அல்லது பசுவின் ஸ்வாமிக்கோ? அந்த கோவின் யஜமானனுக்குத்தானே. ஆகையால் விதி நிஷேதங்கள் எல்லாம் மனிதர்களுக்குத்தான் என்று நிச்சயம் செய்துகொண்டு சாஸ்திர பிரகாரம் நடந்தால் சுகப்பிராப்தி அடைந்து துக்கமில்லாமல் இருக்கலாம்.



## IV

பிரபவ-ஸு ஆனி-மீ 4-உ (ஸ்திரவாரம்).

18—6—1927.

முன் மூன்று உபந்யாஸங்களில் ஜன்மாந்தரம் உண்டு, வேதசாஸ்திரம் பிரமாணம், ஈசுவரன் உண்டு என்று மூன்று விஷயங்கள் சொல்லப்பட்டன. மேலே சொன்ன மூன்று விஷயங்களை ஒத்துக்கொண்டால் லோகாந்தரம் உண்டென்றும் ஒத்துக்கொள்ளவேண்டியது. ஏன் என்றால் ஒவ்வொரு காரியத்திற்கும் பலன் இருக்குமல்லவா? நாஸ்திகனை எடுத்துக்கொள்வோம். நாஸ்திகன் கர்மம் செய்கிறான். தேஹமோ ஸ்திரமில்லாமல் இருக்கிறது. செய்த காரியத்திற்கோ பலன் அனுபவிக்கவேண்டியிருக்கிறது. தேஹமோ போய் விடப்போகிறது. போனபின் வேறு இருப்போ கிடையாதென்றால் என்ன பண்ணுகிறது?

अवश्यमनुभोक्तव्यं कृतं कर्मशुभाशुभम् ।
ना भुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि ॥

என்றபடி செய்த காரியத்திற்கு பலம் வேண்டுமோ அல்லவோ? ஏதோ பிரதிபலனை உத்தேசித்து சில பேர்கள் கர்மம் செய்கிறார்களோ இல்லையோ? இதைத்தான் நம்மவர்கள் ராஜஸ கர்மம் என்று சொல்லுகிறார்கள். சாகுங்காலத்தில் செய்த காரியம் யாருக்கு உபயோகமாகிறது? பிழைத்துக் கொண்டிருக்கும்போது செய்த கர்மத்திற்கு அந்த கர்மத்தினுடைய பிரதிஷ்டை கிடைக்கின்றது; அதுவேதான் பலன் என்று சொல்லிவிடலாம். ஆனால் இறந்துபோன பிறகு கிடைத்த பிரதிஷ்டையைக் கேட்டு ஸந்தோஷம் யார் அடைகிறது? கேட்டு ஸந்தோஷம் எப்பொழுது இல்லையோ அந்த கர்மத்திற்குப் பலன் இல்லையென்று சொல்வதா?

இப்படியே ஒவ்வொரு கர்மத்திற்கும் ஏற்படும் ஸ்துதிக்கும் நிந்தைக்கும், உயிரோடிருக்கும்போதே ஸ்துதியோ, நிந்தையோ காதில் பட்டால்தானே ஸந்தோஷமோ, துக்கமோ உண்டாகிறது. பரோக்ஷ நிந்தையோ ஸ்துதியோ யாதொரு பலனும் கொடுக்கிறதில்லை அல்லவா? நாம் முன்சொன்ன மரணகாலத்தில் செய்த கர்மாவுக்கு என்ன பலன் நாஸ்திகன் சொல்லக்கூடும்?

லோகாந்தரத்தை ஒத்துக்கொண்டால் அந்த கர்மத்திற்கு பலன் கிடைக்கிறதென்று சொல்லலாம். இப்படியே துஷ்கிருத்தியங்களுக்கெல்லாம் பலம் சொல்லவேண்டியது. திருட்டை (சௌர்யம்) எடுத்துக்கொள்வோம். நம்முடைய சாஸ்திரப் பிரகாரம் அது தப்பு. ராஜகிய சாஸ்திரஸம்பந்தமாயும் அது தப்பு. ஒரு திருடன் ஒரு தேசத்தை விட்டு மற்றொரு தேசத்திற்குப் போய்விட்டால், அவன் செய்த கர்மாவுக்குப் பலன் இல்லாமல் போய்விடுமா? ஒரு வேளை க்ருஹம் விட்டுப் போதனும், பந்துவியோகமுமே பலன் என்றால் ஸகுடும்பமாய்த் தப்பிப்போனால் என்ன செய்கிறது? ராஜதண்டனைக்கு உட்பட்டுவிட்டால் ஏதோ சுத்தமாய்விடுகிறது என்று சொல்லலாம். எல்லாக் குடும்பத்தோடும் ஓடிவிட்டால் என்ன செய்கிறது? ராஜசிக்ஷை கிடைக்காவிட்டால் லோகாந்தரத்தில் கிடைக்குமென்று நிச்சயமாய்ச் சொல்லித்தானே தீரவேண்டியிருக்கின்றது. இது எப்படித் தெரிகிறது? நமக்கோ நேரில் தெரிகிறதில்லை. சாஸ்திரங்கள் தான் சொல்லித்தருகின்றன. சாஸ்திரத்தில் தோஷமென்று சொன்ன எல்லா துஷ்கர்மங்களுக்கும் ராஜநிர்ப்பந்தம் இல்லை. ஸந்த்யாவந்தனம் செய்யாவிட்டால் ராஜநிர்ப்பந்தம் என்ன இருக்கிறது? சாஸ்திர நிஷித்தமான கர்மாக்கள் எல்லாம் ராஜ நிஷித்தமல்ல.

மேல் சொன்னதிலிருந்து திருட்டு செய்து தப்பினவனுக்கு லோகாந்தரத்தில் பலன் உண்டு என்று ஸித்திக்கிறதல்லவா? ஆனால் ஸகல கர்மத்திற்கும் லோகாந்தரத்தில் தான் பலன் என்று சொல்லவேண்டியதில்லை. விசேஷமான ஸத்கர்மங்களையோ, துஷ்கர்மங்களையோ செய்தால் இந்த ஜன்மத்திலேயே இந்த லோகத்திலேயே பலன் கிடைக்கிறதென்று சொல்லி இருக்கிறது.

त्रिभिर्वर्षैस्त्रिभिर्मासैस्त्रिभिःपक्षैस्त्रिभिर्दिनैः ।
अत्युत्कटैः पुण्यपापैः इहैव फलमश्नुते ॥

ஆகையால் நமக்கு இந்த லோகத்தில் சுகம் வேண்டுமானால் ஈசுவரஸஹாயத்தால்தான் வரும். கேவலம் மனுஷ்யபிரயத்தனத்தால் மட்டும் கிடைப்பதில்லை. ஆனால் வாஸிஷ்டத்தில் புருஷப்பிரயத்தனத்தால் கிடையாதது இல்லையென்று சொல்லி இருக்கிறது. அதற்கு அர்த்தம் என்னவென்றால் நாம் அனுபவிக்கும் துக்கங்களுக்கு நாமே காரணமானதாலும் நமது துஷ்கர்மாக்களினால்தான் நாம் துக்கம் அனுபவிப்பதினாலும், துஷ்கர்மாக்களை நிறுத்தியும், ஸத்கர்மாக்களை அபிவிருத்தியும் செய்வதுடன் துஷ்கர்மங்களுக்கு பிரதிக்கிரியைகளையும் செய்தால் நமக்கு வரும் அரிஷ்டங்களை நீக்கி சுகம் அடையலாமென்பதுதான்.

ஈசுவரேச்சையென்பதும், தெய்வம் என்பதும் கர்மபலம் என்பதும் ஏறக்குறைய ஒரே அர்த்தம்தான். பலிஷ்ட கர்மம் செய்தால் துக்கநிவர்த்தி செய்துகொள்ளலாம். தேஹத்தில் அஜீர்ணம் ஏற்பட்டால் அதற்குத் தகுந்த பிரதிக்கிரியை செய்து நீக்கிக்கொள்ளுகிறோமல்லவா? மருந்து கொடுத்து தேஹத்தை ஸ்வஸ்தப்படுத்திக்கொள்வதுபோல்

பிராயச்சித்தாதிகர்மங்களும், விருதம் முதலிய ஸத்கர்மங்களும் செய்தால் துக்கநிவர்த்தியுண்டாகி சுகப்பிராப்தியும் ஏற்படும்.

ஈசுவரனுக்கு, ஒருவனுக்கு துக்கம் வரட்டும், மற்றவன் சுகமாய் இருக்கட்டும் என்று இச்சை உண்டாகுமா? தானாகத் தனக்குத் தோன்றியவாறு கொடுக்கிறான் என்று சொன்னால் வைஷம்யம், நைர்க்ருண்யம் என்ற இரண்டு தோஷம் அவனுக்கு ஸம்பவிக்குமல்லவா? ஆகையால் தெய்வம் என்றால் நாம் செய்த கர்மபலம் என்றுதான் அர்த்தம். நமது சுகப்பிராப்தி கர்மானுஸாரம் தான் என்று சொல்ல வேண்டும்.

सर्वमेवेहि सदा संसारे रघुनन्दन ।
संयक्प्रयुक्तात्सर्वेण पौरुषात्समवाप्यते ॥

ஆகையால் பலிஷ்டமாய் ஸத்கர்மங்களும் பிரதிக்கிரியைகளும் செய்தால், நமது துக்கநிவர்த்தியைச் செய்து கொள்ளலாம். பிரயத்தினம் செய்தால் கிடைக்கும். ஆனால் எந்தவிதமான பிரயத்தினம் என்றால், சாஸ்திரஸம்மதமான பிரயத்தினம். சாஸ்திரங்கள் இரண்டுவிதம், உச்சாஸ்திரம், சச்சாஸ்திரம் என்று. 'उच्छास्त्रं अनर्थाय' இப்பொழுது என்னமோ திரவியம் நமது தேசத்தை விட்டுப்போய்விடுகிறது, ஆகையால் ஸ்வராஜ்யம் வேண்டுமென்று ஜனங்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் சுகத்தின் ஸ்வரூபம் தெரிந்தவர்களானால் இந்தமாதிரி சொல்லவேமாட்டார்கள். இந்த விஷயத்தில் ஸம்பந்தாஸம்பந்தபரிசிலனை செய்துபார்க்கவேண்டும். நம்ம பணத்தால் நாம் சுகம் ஸம்பாதிக்கலாம் என்பதுதானே

கொள்கை. சுகம் வேண்டும். அது பணத்தால் வரும் என்றால், பணம் இருக்கிறவர்களிடமெல்லாம் சுகம் இருக்கவேண்டும். அது அவர்களிடமிருக்கிறதா? ஒருஸமயம் ஏழைகளிடந்தான் அதிக சுகமிருக்கிறதாகச் சொல்லவேண்டும்.

ஸகல தனத்திற்குமேல் ராஜ்யதனம் வேண்டும். இந்த தனத்தால் சுகமுண்டாகுமா? இந்த தனத்தை இப்பொழுது பெற்றிருக்கும் ராஜாவிடத்தில் சுகமிருக்கின்றதா? தவிர இந்த ஸ்வராஜ்யம் ஒருத்தனுக்கா பலபேருக்கா? ஒருத்தனுக்கென்றால் முன்னால் ஒருவன் கையில் இருந்தது, பிறகு மற்றொருவன் கையில் வந்தது. அத்தனைதானே வித்யாஸம். வேறு என்ன கிடைத்துவிட்டது. எல்லாருக்கும் என்றால் எல்லோரும் ஒரேமாதிரியாய் இருக்கமுடியுமா? எங்கேயாவது இருக்கிறார்களா?

வித்யாஸமிருப்பதால்தான் துக்கமுண்டாகிறது. ஆகையால் ஜாதிவித்யாஸமே வேண்டியதில்லை. ஜாதிவித்யாஸத்தினால் ஐகமத்யம் உண்டாகிறதில்லை என்கிறார்கள். பாச்சாத்திய தேசங்களில் ஜாதிவித்யாஸமில்லை. அங்கே ஐகமத்யம் இருக்கிறதா? நமது தேசத்தில் வெவ்வேறு ஜாதிக்குச் சேர்ந்த இருவரிடத்தில் வெகுச்ரேஷ்டமான ஸ்னேகபாவத்தை நாம் பார்க்கிறதில்லையா? மேலும் ஒரே தகப்பன் பிள்ளைகள் சண்டைபோட்டுக்கொள்ளுகிறதில்லையா? இங்கே என்ன ஜாதிவித்யாஸம் இருக்கிறது? இந்த வெறும் யுக்திகளால் பிரயோஜனம் இல்லை. யுக்திக்குமேல் யுக்திசொல்ல முடியுமல்லவா? ஸாமான்ய யுக்திக்குமேல் ஒரு புத்திசாலி யுக்தி செய்து பதில் சொல்லிவிடலாம். அதற்குமேல் அவனிலும் அதிக மேதை உள்ளவன் யுக்தி கட்டி பதில் சொல்லலாம். இப்படியே போய்க்கொண்டிருக்குமல்லவா? இவைகளினா

லெல்லாம் நமக்கு சுகம் வந்துவிடாது. தர்மம்தான் சுகத்திற்குகாரணம், அதர்மம்தான் துக்கத்திற்கு காரணம், என்று தெரிந்துகொண்டு சாஸ்திரபிரமாணத்தை நம்பி நடக்கவேண்டியது.

பகவானே கீதையில் எப்பொழுது எப்பொழுது அதர்மம் மேலிட்டு, தர்மம் கீழடைந்து போகிறதோ அப்பொழுதெல்லாம் நான் பிறக்கிறேன் என்று சொல்லி இருக்கிறுன்.

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥

ஆகையால் அவரவர்கள் தங்கள் தங்கள் தர்மப்பிரகாரம் நடந்தால் அவர்களுக்கும் க்ஷேமம் உண்டாகும். லோகத்திற்கும் க்ஷேமம் உண்டாகும். ராஜகீயவிஷயங்களிலும் அப்படியேதான் நியமம். இல்லாவிட்டால் அவ்வியவஸ்தை ஏற்பட்டுவிடுமல்லவா? "धर्मो विश्वस्य जगतः प्रतिष्ठा" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. யார் யார் எப்படி இருக்கவேண்டுமோ அவரவர் அப்படியிருந்தால்தான் சுகம் உண்டாகும். **चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः** என்று பகவான் சொல்லியபடி நான்குஜாதிகள்தான் ஸ்ரீபகவானுல் சிருஷ்டிக்கப்பட்டவை. மற்றவையெல்லாம் ஸங்கரஜாதிகள். இப்படி பகவந்நியமிதமான தர்மப்படி இருந்தால்தான் க்ஷேமம். எல்லாரும் ஒன்ருய்விட்டால் அப்புறம் பார்த்துக்கொள்வோம் என்று சொல்வதில் பிரயோஜனமில்லை.

நமது ராஜாவுக்கு, நமது சொத்து, பிராணன் இவைகளின்மேல் அதிகாரம் இருக்கின்றது. அப்பேற்பட்ட ராஜாவுக்கு துக்கமே இல்லையா? எப்பொழுதும் சுகமாகவேதான் இருக்கிறுனு?

இது எல்லாம் ஸ்வாராஜ்யத்திற்கு ஹேது அல்ல. வேறு மார்க்கம் ஸர்வத்ராளுக்கும் சொல்லப்பட்டிருக்கின்றது. स्वयमेव राट्-स्वराट् तद्भावः स्वाराज्यम् அதாவது தானே நாதனாய் இருத்தல், பராதீனத்துவத்தின் அபாவம் அல்லவா ஸ்வாராஜ்யம்? இந்த பராதீனத்துவம் எப்படி நம்மைவிட்டுப் போகும்? நாம் ஸதா பணம், பணம் என்று ப்ரயத்தினப்பட்டுக்கொண்டு அதற்கே அடிமையாக இருந்தால் ஸ்வாராஜ்யம் வருமோ? ஈசுவராதீனத்துவம் நமக்கு பாதகமில்லை. இந்திரியங்கள், மனசு, இவைகளின் ஆதீனத்தில் இருக்கிறோமே! நமக்கா ஸ்வாராஜ்யம் ஸித்திக்கும்? நாம் இவைகளின் ஆதீனத்திலிருந்து விலகினால்தானே அது கிடைக்கும்.

पादांगुष्ठाच्छिरोयावत् कणशः प्रविचारितम् ।
न लब्धोसावहं नाम को सावहमितिस्थितः ॥

நாம் நம்முடைய வாஸ்தவநிலைமையைத் தெரிந்துகொண்டால் அப்பொழுதுதான் ஸ்வாராஜ்யம் நமக்கு ஸித்திக்கும் என்று சொல்லலாம்.

நான்குபேர் சேர்ந்து தூக்குகிற சரீரம் எப்படி பத்து மைல் வரைக்கும் போகிறது? தானே போகிறது என்றால் எப்பொழுதும் போய்க்கொண்டிருக்கிறதுதானே. ஸதா ஒருவனுக்கு ரோகம் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஜ்வரம், தலைவலி இத்யாதிகள் அனுவர்த்திகளாய் இருந்துகொண்டிருக்கின்றன. தூங்கும்போது இந்த ஜ்வரதாபத்தையும் தலைவலி வேதனையையும் என் மனுஷ்யன் அனுபவிக்கிறதில்லை? இந்த வேதனையெல்லாம் தேஹஸம்பந்தமானது. ஸ்வரூபமான ஆத்மாவின் ஸ்வபாவம் அல்ல. ஸ்வபாவம் என்பது ஸ்வயகுணம். சக்கரையின் ஸ்வபாவம் தித்

திப்பு, நாய்வாலின் ஸ்வபாவம் கோணல். அதை ஒரு குச்சி போட்டு கட்டினால் நேர் ஆனதுபோல் காணும். குச்சி எடுத்தால் திரும்பக்கோணலாய்ப்போய்விடும். அதேமாதிரி ஸ்படிகத்தின் நிறம் ஸ்வச்சம். சிகப்புத்திரையோ, வஸ்துவோ அதன் ஸமீபத்தில் வந்தால் சிகப்பாய்த் தோன்றுமல்லவா? இதற்குத்தான் அத்யாஸம் என்கிறது.

துக்கம் என்பது நமது தர்மம் அல்ல. சரீர அபிமானம் போய்விடுமானால் அதுவும் போய்விடும். இந்த சரீர அபிமானம் ஜாக்கிரத் ஸ்வப்னம் இந்த இரண்டு அவஸ்தையிலும் இருக்கின்றது. ஸுஷுப்தியிலும் ஞானஸமாதியிலும் இல்லை. இந்த அவஸ்தைகளில் துக்கம் என்பதே இல்லை. என்? சரீரஸம்பந்தமே கிடையாதாதலால். மனதின் ஸம்பந்தம் நசித்துவிட்டதால் துக்கம் போய்விடுகின்றது. ஒரு ஸமயம் சுகம்தான் ஸ்வரூபமோ என்றால் அது அல்ல. அது வேறே. மித்ரபந்து ஸம்பாஷணாதிகள், க்ஷீரபானாதிகள், முதலியவைகளில் சுகம், பாம்புகடி முதலியவைகளில் துக்கம், என்? 'विषयाणां आनुकूल्ये सुखम्' என்று விவேக சூடாமணியில் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் மனஸ்ஸம்பந்தத்தால்தான் சுகதுக்கபாவம் ஏற்படுகிறது.

தவிர ஒரே பதார்த்தத்தால் சுகம் வருகின்றது என்று சொல்ல முடிகிறதில்லை. தித்திப்பான பதார்த்தங்கள் ஸாமான்யமாய் எல்லோருக்கும் பிடிக்கின்றது என்று சொல்லலாம். ஆனால் சிலருக்கு அதின்மேல் வெறுப்புண்டாவதைப் பார்த்திருக்கிறோம். அவர்களுக்கு காரம் பிரியம். இவைகள் இரண்டிலும் ஏதோ ருசி இருக்கின்றது என்று சொல்லலாம். கசப்பில் என்ன ருசி இருக்கின்றது? பாகக்காயை ஸாப்பிடுகிறவர்கள் இல்லையா? நமக்கு ஆசை எந்த வஸ்து

விலிருக்கிறதோ அந்த வஸ்து கிடைத்தால்தான் சுகம். ஒரே வஸ்து ஒரு ஸமயத்தில் சுகத்தையும், மற்றொரு ஸமயத்தில் துக்கத்தையும் கொடுக்கின்றதே! ஒருவனுக்கு மாம்பழத்தில் பிரியம் என்று வைத்துக்கொள்வோம். நிறையத் தின்ற பின்பு மறுபடியும் மாம்பழத்தில் பிரியம் உண்டாகுமோ? சுகம் போதும் என்று சொல்லுவாரும் உண்டோ?

ஆகையால் சுகம் வஸ்துக்களிடத்தில் இல்லை என்று தெரிகின்றது. சுகம் என்பது ஒரே வஸ்துதான். அதில் வித்யாஸமில்லை. ஆனால் வெவ்வேறு மனுஷ்யர்களுக்கு வெவ்வேறு வஸ்துக்களிடத்தில் வெவ்வேறு காலங்களில் உண்டாகின்றது. ஆனாலும் சுகம் என்பது ஒரேமாதிரிதான். ஏழைக்கும் யுவஸார்வபௌமனுக்கும் உண்டாகும் நித்ரா சுகத்தில் வித்யாஸமேதாவது உண்டா? கிடையாதல்லவா. அதேமாதிரிதான் ஆரோக்கியமும்.

பர்த்ருஹரி சொல்லுகிறார்:

तृषा शुष्यत्यास्ये पिबति सलिलं शीतमधुरम्
क्षुधार्तश्शाल्यन्नं कवलयति सूपादि सहितम् ।
प्रदीप्ते कामाग्नौ सुदृढतरमालिङ्गति वधूम्
प्रतीकारं व्याधेस्सुखमिति विपर्यस्यति जनः ॥

தாகம் வந்தபோது சீதமாய், மதுரமாய் இருக்கும் தீர்த்தம் ஸாப்பிட்டால் சுகம் என்று சொல்லுகிறார்கள். இது ஸரியல்ல. வியாதி வந்தது, மருந்து ஸாப்பிட்டு அது தீர்ந்து போயிற்றே தவிர சுகம் வரவில்லை. தண் ஸாப்பிட்டதனால் சுகம் வந்தால், தாகசமனம் ஆனபின்பும் ஸாப்பிடுகிறதுதானே. சுகம் எப்பொழுதும் வேண்டியதுதானே. தாகம் இருக்கும்போதுதான் சுகம் வேண்டும், மற்ற காலத்தில் வேண்டாம் என்று உண்டோ? அதேமாதிரி மருந்து வைத்

தியன் எப்படிச் சொல்லி இருக்கிறானோ எந்தெந்த காலத்தில் ஸாப்பிடச் சொல்லி இருக்கிறானோ அந்தந்த காலத்தில் அந்தந்த விதத்தில் ஸாப்பிட்டால் ரோக நிவர்த்தியாகி சுகமுண்டாகின்றது என்று சொல்லிக்கொள்ளுகிறோம். அவன் சொல்லாத ஸமயத்தில் ஸாப்பிட்டாலாவது, அல்லது அனேக தடவைகளுக்காக ஏற்படுத்திய மருந்துகளை ஒரே தடவையிலாவது ஸாப்பிட்டால் சுகம் உண்டாகுமோ? அனர்த்தமல்லவோ உண்டாகிவிடும். சுகம் என்பது அந்த மருந்தால் உண்டாயிருந்தால் ஜாஸ்தியாய்ச் சாப்பிட்டதால் கேடு வருவானேன்? அதேமாதிரி வயிறு பசித்தால் பருப்போடு அன்னம் ஸாப்பிட்டால் தீருகின்றது. இதனாலெல்லாம் தெரிந்துகொள்ளவேண்டியது என்னவென்றால் தேஹத்தில் ஜ்வரம்மாதிரி ஒரு வியாதி வந்திருந்தது, அந்த வியாதி நிவாரணமாயிற்றே தவிர, சுகம் வந்துவிடவில்லை. இதேமாதிரிதான் லௌகிகமாய் சொத்து வந்துவிட்டால் சுகம் வந்துவிட்டது என்று நினைத்துக்கொள்ளுகிறோம். நல்ல காட நித்திரை செய்துவிட்டு, பரம தரித்திரன் ஒருவன் "அப்பா சுகமாய்த் தூங்கினேன்" என்று சொல்லுகிறான். இவனிடத்தில் என்ன பணம் இருந்தது? எந்தப் பணத்தைச் செலவுசெய்து இந்த சுகத்தை வாங்கினான்? ஸுஷுப்தியில் இவன் அநுபவித்த சுகத்தில் எத்தனை பணம் இருக்கின்றது? ஒன்றுமில்லையே! வெகுவாய் நாம் சொல்வதெல்லாம் இந்த ஐந்து விஷய சுகம்தான்.

இந்த ஐந்து சுகமும் ஐந்து இந்திரியங்கள் மூலமாய்த் தானே வருகின்றது. இது என்ன ஒன்றொன்றாய்க் கொடுக்கின்றதா? அல்லாமல் ஐந்தும் சேர்ந்து கொடுக்கின்றதா? சேர்ந்து கொடுக்கின்றது என்று சொல்ல இடமில்லை. ஏனென்றால் ஒன்றினாலேயே நமக்குக் கிடைக்கின்றது. சப்

தஞானம் இருந்து காதில் பட்டால் உடனே சுகம் உண்டாகின்றது. ஆகையால் இந்த விஷயசுகங்கள் ஜாக்கிரம், ஸ்வப்னம் இந்த இரண்டில்தானே கிடைக்கும். ஸுஷுப்தியில் இதெல்லாம் இல்லை. இதில்தான் இந்த ஐந்து விஷயஸம்பந்தமில்லாத சுகம். ஜாக்கிரம், ஸ்வப்னம் இந்த இரண்டு அவஸ்தைகளில் சுகம் வந்தாலும் ஒரேமாதிரி எப்பொழுதும் சுகம் கிடைக்கிறதில்லை. ஒருவனுக்கு ஒரு குழந்தையின்மேல் பிரியம் என்று வைத்துக்கொள்வோம். தனக்குவேண்டிய போது லாலனைசெய்து சுகம் அடைகிருன், வேறு காரியங்களில் பிரவர்த்தியாய் இருக்கும்போது அதே குழந்தை வந்தாலும், அவனுக்குத் துக்கம் உண்டாகின்றது. இது எப்படி வந்தது ? இதெல்லாம் மனதின் ஸம்பந்தத்தினுல் வந்தது.

ஆகையால் ஜாக்கிரம், ஸ்வப்னம் இரண்டிலும் தேஹஸம்பந்தம் இருந்தது, ஸுஷுப்தியில் மனது நாசமடைந்திருந்ததால் சுகம் கிடைத்தது. அதைத்தான் சொரூபசுகம் என்று சொல்லுகிருர்கள். அதுதான் நமது தர்மம். இதைத்தான் பரமானந்தம் என்பது. இந்த ஆனந்தம் இரண்டுவிதமானது, ஸாமயாநந்தம், நிராமயாநந்தம் என்று. முதல் துக்கஸம்பந்தமானது. மற்ருென்று துக்கமிச்ரமல்லாதது. நிர்லிப்தமான ஆனந்தம். இதை ஆகாச ஆனந்தம் என்பார்கள். दुःखलेशम् इல்லாதது இது. ஒருவிதமான ஆனந்தமுமே இல்லாதுபோனுல் யார்தான் பிழைத்திருக்க முடியும்? ஒருவன் சிவராத்திரி, ஜன்மாஷ்டமி இத்யாதி தினங்களில் ராத்திரி ஜாகரணம் செய்கிருன். செய்யும் போது ஜாட்யத்தையும் பார்க்காமல் விழித்திருக்கிருனே. எப்படி ? தூக்கம் வந்தும் விழித்திருப்பதில் ஒரு சுகம் இருப்பதினுல்தானே விழித்திருக்கிருன். இத்தனைக்கும்

நிராமயமான சுகம் அனுபவிக்கவில்லை. இதற்கெல்லாம் என்ன காரணம்? ஏதோ சாஸ்திரம் ஜாகரணம் செய்யவேண்டும், என்று சொல்லியிருப்பதை அவன் மனது நம்பினதால்தானே. மற்ரெருருவனை எடுத்துக்கொள்வோம். மிருதுவான படுக்கை, சுகந்தம், சங்கீதம், மற்றும் லௌகிகமான சுகஸாதனங்கள் அநேகம் இருந்தும் அவனுக்கேன் தூக்கம் வரவில்லை. தூக்கம் வந்துவிட்டால் அது மிருதுவான இடத்தில்தான் வருகிறதா? வந்தபிறகுதான் அது மிருதுவான சையாவிலேயே இருக்கின்றது உண்டா? இந்த இடங்களில் மனமே இல்லை. சரீரஸம்பந்தமே இல்லை. அதனால்தான் சுகம் கிடைத்தது. இந்த சுகம்தான் சொரூபசுகம். இது ஸர்வத்ராளின் அனுபவம் அல்லவா? ஆகையால் இந்த இந்திரியங்கள் சுகஸாதனங்கள் அல்ல என்பது நிச்சயம். அது மாத்திரம் அல்ல. துக்கஹேதுக்களே என்று நிரூபிக்கலாம். ஸ்ரீமத் ஆசார்யாள் சொல்லுகிறார்கள் :—

शब्दादिभिः पंचभिरेव पंच पंचत्वमापुः स्वगुणेन बद्धाः ।
कुरंग मातंग पतंग मीन भृंगा नरः पंचभि रंचितः किम् ॥

சப்தத்தால் மானும், ஸ்பர்சத்தால் யானையும், ரூபத்தால் விட்டில்பூச்சியும், ரசத்தால் மீனும், கந்தத்தால் வண்டும் தங்கள் தங்கள் சுகத்தை இழந்து, உயிரே போகும்படி செய்துக்கொள்ளும்போது, இவ்வைந்தும் சேர்ந்து ஒரு மனுஷ்யனை வருத்தும்போது அவன் கதிதான் என்ன?

யானைப்பிடிக்கிறவர்கள் நன்ருய் கானம்பண்ணி அதில் லயித்து இருக்கும்போது, வேறுவழியில் வந்து பிடிக்கிறது வழக்கம். அதேமாதிரி ஆண் யானையைப்பிடிக்கப் பெண் யானையைக் கொண்டுபோகிருர்கள் அல்லவா? தீபம் ஒரு பழம்

என்று நினைத்துத்தானே விட்டில் போய் விழுந்து மாய்கிறது? ருசியான உணவு என்று நினைத்துத்தானே மீன் தூண்டிலில் மாட்டிக்கொண்டு இறக்கின்றது. ரக்த சண்பக மலரில் இருக்கும் தேனை ஸாப்பிடச்சென்று வாஸனையின் தாபத்தால் வண்டுகள் இறக்கின்றனவே. இந்த ஒவ்வொரு விஷயசுகமே தனித்தனியாய் ஒவ்வொரு பிராணிகளுக்கு இவ்வளவு அநர்த்தம் செய்ய யோக்கியதை இருக்கும்போது இவ்வைந்தையும் விரும்பும் மனிதனின் நாசத்திற்குக் கேட்பானேன். என்ன ஸந்தேஹமிருக்கமுடியும்? ஆகையால் இந்திரியவிஷயங்களால் சுகம் இல்லை என்பது நிதர்சனமாகின்றது.

விசேஷித்து பந்தனம் செய்வதால் விஷயம் என்று பேர் வந்திருக்கின்றது. சிந்தனையிலாழ்ந்திருக்கும்போது வீணுகானத்தை உபயோகித்து சுகப்படுகிறோம். ஏன்? சிந்தையிலேயே சென்றுகொண்டிருந்த மனதைத்திருப்பி மனதை மறந்திருக்கச்செய்தால் தானே சுகம் கிடைக்கின்றது. கோடைக்காலத்தில் விசிறிகொண்டு விசிறினால் சுகமாய்த்தான் இருக்கின்றது. இந்த சுகம் விசிறியால் வந்ததானால் பனிகாலத்திலும் விசிறி வீசினால் உண்டாகவேண்டுமல்லவா? ஏன் வருகிறதில்லை? வெய்யில்காலத்தில் தாபசாந்திக்காக நீலகிரிக்குப் போகிறோம். ஏன் பனிகாலத்தில் அங்கு போகிறதுதானே. ஆகையால் இவையெல்லாம் சுகஸாதனங்கள் அல்ல. நாம் ஒன்றும் புதிதாய்க்கண்டுபிடிக்க வேண்டியதில்லை. நமது பெரியவர்கள் இதையெல்லாம் சிரமப்பட்டு பரிசிலனைசெய்து தர்மானுஷ்டானமே சுகஸாதனம் என்று ஏற்படுத்தி இருக்கிறார்கள். அவர்களுக்கு இருந்த தார்ட்டியம் நமக்கில்லை. சும்மா வெறுமனே தின்று கொண்டிருந்தால் திருடம் வந்துவிடுமா? அவர்கள் இரண்டு

வேளைக்குமேல் ஸாப்பிடவில்லை. அவர்கள் பலமான சரீரிகளாய் இருந்தார்கள். இப்பொழுது தர்மானுஷ்டானமும் இல்லை, கர்மானுஷ்டானமும் இல்லை.

நமது நன்மைக்காக சாஸ்திரம் ஏற்பட்டிருக்கிறது. "परार्थाय शास्त्रम्" அல்லவோ. லௌகிகமாய் ஒரு திருஷ்டாந்தம் எடுத்துக்கொள்வோம். காய்ச்சல் ஒருவனுக்கு வந்திருக்கின்றது என்றால் பச்சைத்தண் சாப்பிடலாமோ? சிதம் பிறந்து சரீரம் போய்விடாதோ. ஆயுர்வேதத்தில், "उष्णमुष्णेन शाम्यति" என்றுசொன்ன பிரகாரம் தகுந்த குடிகாபஸ்மாதிகளைச் சொன்னவாறு உபயோகித்து பத்யப்படி இருந்தால் சுகமாகிறது. ஆகையால் எந்தவிதத்திலும் சாஸ்திரானுஸாரமாய் நடந்தால் சுகம் உண்டாகின்றது என்பது நிச்சயம். இந்த நிபந்தனைகள் ஒன்றும் இல்லையே பாச்சாத்யர்களுக்கு; அவர்கள் சுகிக்கவில்லையா? அவர்கள் எத்தனை தனம் ஸம்பாதிக்கிறார்கள் என்று கேட்கிறார்கள். வீண் கேள்வி. இன்னும் வேண்டும், இன்னும் வேண்டும் என்று சொல்லுகிறவனுக்கா சுகம்? அவன் பரம தரித்திரன் அல்லவோ. அவனுக்கேது ஸ்வராஜ்யம்? அவனுக்கு சுகசொரூபமே தெரியாதே. அவர்களிடத்தில் அது இல்லவே இல்லை.

சுகம் என்ன என்று தெரிந்துகொள்ளவேண்டும். ஸ்வரூப சுகம்தான் சுகம். அது என்னமோ சில ஸமயத்தில் உண்டாகின்றது. ஏன் எப்பொழுதும் நிரந்தரமாய் இருக்கிறதில்லை? ஸுஷுப்தியில் மாத்திரம் ஏன் உண்டாகின்றது என்றால், சுகத்தை ஒரு ஆவரகம் (மூடி) மூடிக்கொண்டிருக்கிறது. அந்த மூடியை நீக்கினால் உடனே அதின் ஸ்வரூபம் தெரிகின்றது. மறுபடி மூடினால் மறைந்து போகின்றது. அதாவது ஞானம் இல்லாமல் இருப்பது. சூரியன் எவ்வ

ளவு பிரகாசமுள்ளவனுய் இருந்தாலும், மேகம் மூடிவிட்டால் எப்படித் தெரிகின்றதில்லையோ அந்த மாதிரி ஸ்வரூபம் மூடப்பட்டிருப்பதால் தெரிகின்றதில்லை. அப்படி மேகஸ்தானத்தில் நமக்கு பிராந்தி, அல்லது அஞ்ஞானம் இருக்கின்றது. இந்தப் பிராந்தியின் நிவர்த்தி வந்தால், அதாவது ஞானம் பிராப்தியானுல் சுக ஸ்வரூபம் கண்டுகொள்வோம். மேலே சொன்ன ஆவரகத்திற்கு இரண்டு சக்திகள் உண்டு. ஆவரண சக்தி, விக்ஷேப சக்தி என்று. மேகம் மூடிக்கொண்டு சூரியனைத் தெரியாமல் செய்வது ஆவரண சக்தி. அத்துடன் மழை காற்று மின்னல் முதலியவைகளைக் கொடுத்து அதனுல் பாதசாரியை துக்கப்படுத்துவது விக்ஷேப சக்தி.

कवलितदिननाथे दुर्दिने सान्द्रमेघैः
व्यथयति हिमझंझावायुरुग्रो यथैतान् ।
अविरततमसात्मन्यावृते मूढबुद्धि
क्षपयति बहुदुःखैस्तीव्रविक्षेपशक्तिः ॥

ஆகையால் ஸ்வரூப சுகம்தான் சுகம். எப்படி என்றுல், பிரபஞ்சத் தோற்றமே இல்லாத சதாசிவ பிரம்மேந்திராளுக்கு எப்படி சுகம் இருந்துகொண்டே இருந்தது? அவரிடத்தில் மேலே சொன்ன இந்திரிய சுக ஸாதனங்கள் ஒன்றுமே கிடையாதே. அப்படி இருந்தும் சுகமயமாகவே இருந்ததாகவே சொல்லி இருக்கிறதே. இந்த சுகத்தை அடைய மூன்று வழிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் கர்மம், பக்தி, ஞானம் என்று மூன்று யோகங்கள். योगश्चित्तवृत्तिनिरोधः யோகம் என்றுல் மனதின் போக்கைத் தடுப்பதுதான். மதுரமான கானம் பண்ணிக்கொண்டிருந்தாலும், மனம் வேறே விருத்தியில் இல்லாமலிருந்தால்தான் கானசுகம்

கிடைக்கின்றது. ஆனால் விஷயத்தில் எல்லாம் அல்ப சுகம் தான் கிடைக்கின்றது. ஆனதினால் அதற்கு க்ஷணிகம் என்று பெயர். க்ஷணிகம் அல்லாதது நிர்விகல்பசுகம்.

"வேணும்" என்கின்ற ஆசையில்லாமல்போனால் சித்தவிருத்தி நிரோதம் உண்டாகின்றது. வேணும் என்ற ஆசை போச்சு; இன்னொரு ஆசை உண்டாகிறதில்லை. விகல்பம் எப்பொழுது இல்லையோ அப்பொழுதுதான் சுகம். நிதி இருந்தால் பிச்சைக்குப் போவானேன்? நாமே அந்த சுக ஸ்வரூபம் என்று தெரிந்துகொண்டால் துக்கம் போய் விடும். त्रिपथानि निरोधः.........மனோவாஸனை போகவேண்டுமானால் ஆத்ம ஸ்வரூபம் தெரிந்துகொள்ளவேண்டும். அப்படித் தெரிந்துகொண்டால் துக்கம் போய்விடும். அப்படி இருந்தும் யாரும் இச்சிக்காத துக்கம் பலாத்காரமாய் ஏன் தோன்றி வருகின்றது?

अथ केन प्रयुक्तोयं पापं चरति पूरुषः ।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥

இதற்குக் காரணம், காமம், குரோதம் முதலியன.

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।
महाशनो महापाप्मा विध्येनमिह वैरिणम् ॥

ஆகையால் இந்த காமக் குரோதாதிகளை நமது விரோதிகள் என்று தெரிந்துகொள்ளவேண்டியது. எச்சல் இலையை வெளியில் எறிந்தால் எத்தனை நாய் சண்டை போட்டுக் கொள்ளுகின்றன? என்ன காரணம்? காமமே, அதாவது வேண்டுமென்ற இச்சையே காரணமல்லவா?

योन्यथा सन्तमात्मानं अन्यथा प्रतिपद्यते ।
किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

என்றபடி ஞானியைத் தவிர மற்றவர் எல்லாரும் திருடர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. திருட்டுத் தனம் என்றால் என்ன? अनिष्टदेशसंयोगानुकूलव्यापारम् தானே. நாம் செய்கிறது திருட்டுத் தனம் தானே. திருட்டுத் தனம் இருந்தால் மற்ற எல்லா பாபங்களும் வந்துவிடுமல்லவா? இவை எல்லாம் நமது தேஹாபிமானத்தால் வருகின்றன. இது போனால் சுகப்பிராப்திக்கும் துக்கநாசத்திற்கும் காரணம் ஏற்படும்.

சுகப் பிராப்தி, துக்க நிவர்த்தி இவைகளின் உபாயத்தை எப்படி அடைகின்றது? ஸதா நித்திரை செய்துகொண்டிருக்கிறதா என்ன? கும்பகர்ணன் மாதிரி இருப்பதா? அது ஒரு சாபமாக அல்லவோ சொல்லப்படுகிறது? அது தமோகுணம்தானே! நமக்கு சத்வ குணம் அல்லவோ வேண்டும்? இதையெல்லாம் எங்கே சொல்லி இருக்கிறது? சாஸ்திரங்கள்தான் சொல்லுகின்றன. சுகஸ்வரூபம் தெரிந்துகொள்ளாவிட்டால் சுக ஸம்பாதனம் எப்படி?

மனஸ்ஸின் ஸம்பந்தம் விட்டால் சுகம் என்று சொன்னோம். அப்படி விருத்தி நிரோதம்தான் ஸாதனம் என்று சொன்னோம். விருத்தி என்பது இரண்டு விதம். துர்விருத்தி, சத்விருத்தி. துர்விருத்தி நிரோதம் முதலில் செய்துக்கொண்டு, சத்விருத்திகளில் மனதைச் செலுத்தி துக்க காரணமான விருத்தியைத் தூரத் தள்ளவேண்டும். மண் சாப்பிடுகிற குழந்தைக்கு பழம் கொடுத்துப் பழக்குகிற மாதிரி பழக்கி பிறகு அதையும் நிறுத்திவிடலாம். விபரீத மார்க்கத்தில் போகிறவனை நல்ல வழியில் திருப்பினால் நல்ல விருத்தி ஏற்படுகின்றது. நல்ல விருத்தி வந்தால் மனோநாசம், வாஸனாக்ஷயம் ஏற்பட்டு விதேகமுக்தி வருகின்றது. மன

தின் சுத்தி விசார ஸாமர்த்தியத்தால் செய்துக்கொள்ள வேண்டியது. இந்த துர்விருத்தி நிரோதனத்திற்காக பகவத்பாதாள் உபதேசபஞ்சகத்தில் (ஸோபானபஞ்சகம் என்றும் அதற்குப் பெயர் உண்டு.)

वेदो नित्यमधीयतां तदुदितं कर्म स्वनुष्ठीयताम् ।
तेनेशस्य विधीयतामपचितिः काम्ये मतिस्त्यज्यताम् ।

पापौघः परिधूयताम् என்று சொல்லிவிட்ட பிறகுதானே भवसुखे दोषोनुसन्धीयताम् என்று சொல்லி இருக்கிறார். முதலிலேயே அப்படிச் சொல்லவில்லை.

நாம் அது மாத்திரமே அல்லாமல் துக்கத்தையே சுகமாக நினைத்துக்கொண்டிருக்கிறோம். நமக்கு ஒரு பெரிய அதிகாரம் இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். அந்த வேலையைச் சரியாய்ச் செய்வதில் எத்தனை சிரமம் நமக்கு வருகின்றது? அத்தனை சிரமப்பட்டால்தானே அந்தப் பதவியை வஹிக்கலாம்? அதனால் கௌரவமும் அடையலாம். இதை விட்டு விட்டு ராஜிநாமா கொடுத்துவிட்டு வந்தால் யாராவது மதிப்பார்களா? வேலையை விட்டுவிடக் கூடாது. சாஸ்திரீயமான கர்மாக்களைச் செய்துகொண்டுவந்தால் தற்காலம் கஷ்டமாய் இருந்தாலும் பின்னால் சுகம் கிடைக்கும்.

ஆவரகம் போனால் சித்த சுத்தி எற்படும்; மேகம் போனால் சூர்யவெளிச்சம் உண்டாகிறதுபோல்.

योगास्त्रयो मया प्रोक्ता नृणां श्रेयोविधित्सया ।
ज्ञानं कर्म च भक्तिश्च नोपायोन्योस्ति कुत्रचित् ॥

இந்த மூன்று யோகத்தால் ஞானம் ஸம்பாதித்தால் மோக்ஷம் கிடைக்கின்றது.



## V

பிரபவ-ஸ்ரீ ஆனி-மீ 9-உ (குருவாரம்)

23—6—27.

வெருவாய் இந்த அக்கிரஹாரத்தில் இருக்கிற ஜனங்கள் எல்லாரும் படித்துத் தெரிந்தவர்களாய் இருக்கிறார்கள். இந்தக்கட்டிடமும், வித்யாப்யாஸத்திற்கு ஏற்பட்ட பள்ளிக்கூடமாகிய பாடசாலை என்று சொல்லுகிறார்கள். ஆகையால் இன்றைய விஷயம் வித்தை. வித்தை என்பது என்ன என்று விசாரிப்பது நிரம்பப் பொருந்தினதாய் இருக்கும். நம்மவர்கள் எல்லாரும் ஒரு குழந்தை பிறந்து அதற்கு வயதுவந்தவுடன் அக்ஷராப்யாஸம் செய்துவைக்கிறார்கள். ஏன்? வித்தை முக்கியமாய் இருப்பதினால் அல்லவா? எப்படி முக்கியம்? என்ன பலன் அதற்கு? வித்தை என்பது என்ன? பலமானது எந்த வித்தையால் வரும்? எப்பேர்பட்ட பலம் வேண்டும்? இந்தமாதிரி விசாரம் செய்யவேண்டியது அவசியமாகிறது. வித்தைக்குப்பலம் உண்டு என்று சொன்னதினாலேயே வித்தையே பலம் அல்ல என்று விசதமாகிறதல்லவா? ஆகையால் வித்தையானது ஒரு உபாயம். இன்னொரு பலத்திற்கு ஒரு காரணம்.

उपायेच्छां प्रति फलेच्छायाः कारणत्वम् ।

பலம் தெரிந்துகொண்டுதானே அதற்கு உபாயம் தேடுகின்றோம். போஜனம், க்ஷுத்நிவர்த்திக்கு உபாயம் என்று தெரிந்துகொண்டிருக்கிறோமல்லவா. போஜனம் செய்து திருப்திவந்தபிறகு மறுபடி போஜனம் செய்கிறோமோ? ஸகலத்திற்கும் உலகத்தில் இப்படியேதான். உபாயம் ஒன்று. அதனால் அடையும் பிரயோஜனம், அதாவது பலன் மற்றொன்று. ஆகையால் வித்தை உபாயமே தவிர பலமல்ல

வென்று நன்றாய்த்தெரிந்துகொண்டு பலம் என்றால் என்ன என்று சற்று விசாரிப்போம்.

முன் உபந்யாஸங்களில் சொல்லியபிரகாரம் எல்லாரும் எப்பொழுதும் தேடுகிற பலன் ஒன்றேதான். சுகப்பிராப்தி துக்கநிவர்த்திதான். இந்த சுகப்பிராப்தி துக்கநிவர்த்தி எப்படி வருகின்றது? ஒருவன் தக்ஷிணைக்குப் போகிறான். என்னத்திற்கு? அங்கே போனால் தக்ஷிணை கிடைக்கும், அதனால் தனக்கு வேண்டியவைகளை வாங்கிக்கொள்ளலாம். அதனால் சுகமடையலாம் என்பதுதானே. எல்லாம் இவனுக்கு இருந்தால் இவன் ஏன் தக்ஷிணைக்குப் போகிறான். அதேமாதிரி ஒருவன் பெருத்த வியாபாரம் செய்கிறான். என்னத்திற்கு? ஏதோ நல்ல லாபம் கிடைக்கும். அதனால் தனக்கு வேண்டியவைகளைப்பெறலாம் என்பதற்குத்தானே. அதுவும் அவனுடைய சுகத்தை உத்தேசித்தல்லவா? இதே மாதிரிதான் ஒருவன் கிருஷி முதலானவை செய்வதற்காக ஏற்படுத்திக்கொள்ளும் ஸர்வ பிரயத்தனத்திற்கும் இந்த லோகத்தில் சுகேச்சைதான் காரணம் என்பது இனி நாம் நிர்தாரணம்செய்யவேண்டிய விஷயமல்ல, நன்றாய்த்தெரிந்துகொண்ட விஷயமே. காலில் தைத்த முள்ளைப் பிடுங்குவது முதல், பெரிய வியாபாரம், கிருஷி முதலியனவரை ஸர்வ பிரயத்தனங்களுக்கும் சுகப்பிராப்தி, துக்கநிவர்த்திதான் தூண்டுகோல். ஸர்வ பிராணிகளுக்கும் துக்கத்தில் த்வேஷம் அல்லவா. ஸகலருக்கும் சுகத்தில் இச்சை இல்லையா? ஆகையால் சுகப்பிராப்தியும் துக்கநிவர்த்தியுமேதான் பலம் என்று சொல்ல யோக்யதை உண்டு என்று நிச்சயமாகிறது.

எப்படி என்றால், ஒருவன் உத்தியோகம் செய்கிறான், என்னத்திற்காக? ஏதோ சம்பளம் வருமென்றுதானே!

சம்பளம் என்னத்திற்கு? வீடு, வாசல் வேண்டியவைகளை ஸம்பாதிக்க அல்லவா? இவையெல்லாம் என்னத்திற்கு? இவைகளை வைத்துக்கொண்டு சுகமாய் இருக்க, என்று இத்தோடு முடிந்துவிடுகிறது நமது கேள்விகளின் பாரம்பரை. சுகம் என்னத்திற்கு என்று கேட்கிறதில்லை. இதேமாதிரி காலில் தைத்த முள்ளைப்பிடுங்குவது துக்க நிவர்த்திக்காக. இப்படி துக்கநிவர்த்தியும், சுகப்பிராப்தியும் வந்துவிட்டால் திருப்தி உண்டாகி விடுகிறது. அதன்மேல் பிரயத்தனமும் இல்லை. இந்த திருப்தி என்னத்திற்கு என்று கேள்வியும் இல்லை. ஆகையால் சுகப்பிராப்தி, துக்கநிவர்த்தியாகிற திருப்திதான் பலன் என்பது ஸித்தியாகிறது.

அப்படியானால் நாம் இப்பொழுது அப்யாசித்துவரும் வித்தை இந்த பலனைக்கொடுக்கின்றதா என்று சோதித்துப் பார்க்கவேண்டும். இப்படி பரிசீலனை செய்துபார்த்தால் நமக்குத்திருப்தியைக்கொடுக்கின்றதில்லை இது என்று தெரிகின்றது. அப்படியானால் இந்த வித்தை உபாயம் அல்லவோ என்றுகூடத்தோன்றிவிடும். என் என்றால் ஸாதனம் அதன் பலனைக்கொடுக்காவிட்டால் அது ஸாதனமாகுமோ? எதிர்பார்க்கிறவனுக்கு இது உபாயம் என்று சொல்லிவிட்டு, பலன் அதனால் கிடைக்காவிட்டால் உபாயத்தில் தோஷம் என்றுதானே சொல்லித் தீரவேண்டும். வேறு பலனை எதிர்பார்க்கிறபடியால் வித்தையே பலமல்ல என்று முன்னமே சொல்லிவிட்டோம். ஆகையால் நாம் ஸம்பாதித்த வித்தை உத்தேசித்த பலனைக்கொடுக்காவிட்டால் அது ஸத்ஸாதனம் அல்ல என்று ஊர்ஜிதமாகிறது. அதனால்தான் மகாகவி பர்த்ருஹரி

विद्या ददाति विनयं विनयाद्याति पात्रताम् ।
पात्रत्वाद्धनमाप्नोति धनाद्धर्मं ततस्सुखम् ॥

என்று சொல்லி இருக்கிறார். அதாவது சுகம் கிடைக்க இத்தனை துவாரப் பிரணாளி (வழிகள்) சொல்லி இருக்கிறார். வித்தையிலிருந்து முதலில் விநயமும், விநயத்திலிருந்து பாத்திரத்துவமும், பாத்திரத்துவத்திலிருந்து தனமும், தனத்திலிருந்து தர்மமும், தர்மத்திலிருந்து கடைசியாக சுகம் கிடைக்கின்றதென்றும் சொல்லி இருக்கிறார். இந்த எல்லா துவாரங்களும் தாண்டி கடைசி துவாரம் தாண்டாமல்போனாலும் சுகம் பிராப்தமாகப்போகிறதில்லை. எப்படி ஒரே தேவஸ்தானத்தில் கர்ப்ப கிரஹம் போய்ச் சேர அனேக வாசல்கள் கடந்தும் கடைசி வாசல் கடக்காவிட்டால் கர்ப்ப கிரஹத்துக்குள் போக முடியாதோ அதேமாதிரி வித்தையால் தர்மம் கிடைக்காவிட்டால் சுகப் பிராப்தி இல்லையென்பது நிச்சயம்.

முதலில் **विद्या ददाति विनयम्** என்று சொல்லி இருக்கிறது. விநயம் என்றால் விசேஷ நயம் என்று அர்த்தமாகிறது. நயம் என்றால் உசிதம் எப்படியோ அப்படி நடத்தல் என்று அர்த்தம். **औचित्यज्ञानं विनयम्.** நயமும் நீதியும் ஒரே அர்த்தம் தான். யார் யார் விஷயத்தில் எப்படி எப்படி நடந்துகொள்ளவேண்டுமோ அப்படி நடப்பது விநயம். தாய், தகப்பன், பந்து, மித்திரன், சத்ரு, ராஜா முதலிய ஸகலரிடத்திலும் எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடப்பது. அதாவது தாய்தகப்பனிடத்தில் கீழ்ப்படிதல், பந்துக்களிடத்தில் பிரீதி, ஸ்நேஹிதனிடத்தில் பிரேமை, சத்ருவினிடத்தில் உதாஸீனம், ராஜனிடத்தில் விசுவாஸம், இப்படி எவன் நடக்கிறானோ அவனைத்தானே நாம் விநயமுள்ளவன் என்று சொல்லுகிறோம். ஒருவன் விநயமாய் நடந்தால் சத்ரு அவனுக்கு எற்படுகிறதே இல்லை. அதவா அந்த சத்ருவினுடைய துஷ்டத்தனத்தால் ஏற்பட்டாலும் இவனுடைய

உதாஸீனத்தால் அச் சத்ருவுங்கூட திரும்பிப் போய்விடுகிறான். இந்தமாதிரி நல்ல நடத்தை வராமல் போனால் வித்தையே வரவில்லையென்று சொல்லவேண்டியிருக்கிறது. கேவலம் எழுத்து வாஸனை வந்த மாத்திரத்திலேயே வித்தை வந்துவிட்டது என்று சொல்ல முடியாதல்லவா!

இப்படி விநயம் வந்தவுடன் அவனுக்கு பாத்திரத்துவம் கிடைக்கின்றது. அதாவது யோக்கியதை ஏற்படுகின்றது. ஸகல ஜனங்களிடத்திலும் ஸரியாய் நடந்துகொள்வதினாலேயே ஸகல ஜன விசுவாஸத்திற்கு பாத்திரம் ஆகின்றான். அவர்களால் நன்கு மதிக்கப்படுகின்றான்.

ஸகல ஜன விசுவாஸம் எப்பொழுது கிடைத்ததோ அதோடு தனம் கிடைப்பதும் நிச்சயம்தானே. தனம், தனம் என்றால் எது இஷ்டமோ அதுதான் தனம். அதனால்தான் முனிவர்களைத் தபோதனர் என்றும், நிரம்ப படித்தவனை வித்யாதனமுள்ளவன் என்றும், நல்ல சாந்த குணமுடையவர்களை சமதனமுடையவர்கள் என்றும் சொல்லுகிறோம். எது முக்கியமோ, எது இஷ்டமோ அதுதான் தனம்.

न खलु धनत्वं जातिः यस्य यदिष्टं तदेव तस्य धनम् ।
तत्तदिव पामराणां आकिञ्चन्यं धनं विदुषाम् ॥
(नीलकण्ठ वैराग्यशतकम्)

விநயமும் பாத்திரத்துவமும் உள்ளவனுக்குத் தனம் வந்துசேர்வது ஸித்தம்தானே. யார் யாரால் உபகாரம் வேண்டுமோ அவரவர் செய்யக் காத்துக்கொண்டிருப்பார்கள் அல்லவா? சூரனால் செய்யவேண்டியதைச் சூரனும், சமயல்காரன் செய்யவேண்டியதை அவனும் செய்ய ஸித்தமாய்

இருப்பார்களே! ஏன்? இவனுடைய விநய பாத்திரத்துவத்தால்தான்.

தனம் வந்தாலும், அதனுல் வேண்டியது கிடைத்தாலும், தர்மம் வேண்டும். தர்மம் என்ருல் புண்ணியம் வேண்டும். தனம் வந்தமாத்திரத்தில் சுகம்வந்துவிடுகின்றதா? உலகத்தில் எத்தனை தனிகர்கள் இருக்கின்ருர்கள். அவர்கள் எல்லாம் சுகிகளா? வேணுமானுல் அவர்களுக்குக்கொஞ்சம் துக்கம் ஜாஸ்தி என்று சொல்லவேண்டிவரும். மேலும் மேலும் சேர்த்திக்கொண்டேபோகவேண்டுமென்ற புத்தி அவர்களுக்கு வந்துவிடுகின்றது. ஒரு ராஜாவை எடுத்துக்கொள்வோம். அவனுக்கென்ன ரோகம், வியோகம் முதலிய துக்கம் வருகிறதில்லையா? அவனுக்கும் ரோகம் வருகிறது. நல்ல கெட்டிக்காரனுன ராஜவைத்தியன் பார்த்தும் சொஸ்தமாகாமல் அவன் போகிறதில்லையா? அப்பொழுது நாம் என்ன சொல்லுகிருேம். அவன் புண்ணியம் அவ்வளவுதான். என்று சொல்லிவிடுகிருேமல்லவா?

ஆகையால் வித்தை வந்ததினுல் ஸாக்ஷாத்தாய் சுகம் வந்துவிடுகிறதில்லை. நாம் தெரிந்துகொண்டது ஒரு துவாரம். ஒரு வாசல் நுழைந்தாயிற்று. நாம் இதுவே சுகம் என்று தெரிந்துகொண்டிருக்கிருேம். சாஸ்திரமோ நாலு ஐந்து படிகள் சொல்லியிருக்கின்றது. நம்முடைய உணர்ச்சி ஸரியா, சாஸ்திரம் ஸரியா? இந்தக்காலத்தில் இருக்கும் வித்தையைக்கொண்டு நமக்கு என்ன வருகின்றது என்று பார்ப்போம்.

ஒன்று விநயம் ஸம்பாதித்துக்கொள்ளலாம். அதனுல் தற்கால அதிகாரிகளிடம் பாத்திரத்துவமும் அடையலாம்

இரண்டு. அதனால் தனமும் ஸம்பாதிக்கலாம் மூன்று. அத்தோடு முடிந்தது. வித்தையால் அதிகாரம், அதிகாரத்தால் தனம், அவ்வளவுதான். தர்மம் இல்லாமல் போனால் சுகம் கிடைக்குமோ? கிடைக்காது என்று சாஸ்திரம் சொல்லுகின்றது. நமக்கு வேறேவிதமாய்ச் சுகம் கிடைத்துவிட்டால் சாஸ்திரத்திற்குப் போகவேண்டியதில்லை. வீட்டிலிருந்து கொண்டே ஒருவனுக்கு ஸகல வித்தையும் வந்துவிட்டால் அவன் பாடசாலைக்குப் போவானேன்?

நம்முடைய பூர்வகாலவித்தையில் நல்ல ஸம்ஸ்காரம் உண்டாகும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்தக் காலத்தில் அது இல்லை. ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்று ஒத்துக்கொள்ளாமல்கூட வித்யாப்யாஸம் செய்யலாம். வித்தையை பலவேறு பாஷைகளில் சொல்லிக்கொடுக்கலாம். அதனால் மட்டும் அது சாஸ்திரமாகாமற்போகாது, எப்படி என்றால் ராஜ ஆக்ஞையை மந்திரிதுவாரா செலுத்தினாலும் அது மந்திரியினுடைய ஆக்ஞை ஆய்விடாது. அதுபோல பாஷாந்தரத்தில் சாஸ்திரக் கருத்து சொன்னால் அதினால் மட்டும் அது சாஸ்திரீயமல்லாமல் போகாது. இதனால் ஸகலத்தையும் தர்ஜமா செய்துக்கொண்டு விடலாம் என்று அர்த்தமல்ல. சாஸ்திரத்தில் எப்படிச் செய்யும்படி விதித்து இருக்கிறதோ அப்படியே செய்து தீரவேண்டும். நவீன வித்தையால் விநயமும், பாத்திரத்துவமும் வருகின்றது என்று சொல்லலாம். இந்தக் காலத்தில் தனம் வந்துவிடும் என்று நிச்சயமாய்ச் சொல்லுவதற்கில்லை. இருந்தாலும் அதுவும் வருகின்றது என்று வைத்துக்கொள்வோம். அதற்குப் பிறகு தர்மம் வருகிறதில்லை.

தர்மம் என்றால் என்ன? சோதனா லக்ஷணம் தர்மம். சாஸ்திரங்களைப் பரிசோதித்து அதிலிருந்து தெரிந்துகொள்

வது தர்மம். விதி பிரமாணத்தை உடையது தர்மம். சாஸ்திரங்களில் எப்படிச் சொல்லி இருக்கிறதோ அந்தப்படி நியமிதமான விதமாய் நடப்பதுதானே தர்மம். இந்த வழிக்குத் தாத்காலிகவித்தை உபயோகமாகிறதா? இல்லை.

சிலர் ஸந்த்யாவந்தனத்தை இங்கிலீஷில் செய்தால் என்ன என்று கேட்கிறார்களாம். இதற்கு ஒரு ஸாமான்ய லௌகிக திருஷ்டாந்தம் கொடுப்போம். பரீக்ஷையில் இங்கிலீஷில் எழுதவேண்டியவைகளை எல்லாம் தமிழில் எழுதினால் அது ஸாதுவாகுமோ? அந்தப் பையன் பரீக்ஷையில் ஜயிப்பானோ? மேலும் பரீக்ஷையில் இங்கிலீஷ் கொடுத்து அதைத் தமிழ்படுத்தச் சொன்னால் அப்பொழுது தமிழ் ஸாதுவாகிறதல்லவா? ஆகையால் சொன்னபடி செய்கிறது தான் தர்மம். இந்தப் பரீக்ஷையில் தேறுவது திருஷ்டமான விஷயம், அத்யல்பமானது. இதற்கே இத்தனை நிர்பந்தங்கள் இருக்கின்றனவே! சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவைகளோ அதிருஷ்டமான பலனைக் கொடுக்கின்றவை. பாபம் போகின்றது, புண்ணியம் வருகின்றது என்று அதில் எப்படிச் சொல்லி இருக்கின்றதோ அப்படிச் செய்யவேணுமா, அல்லது நமக்குத் தோன்றின மாதிரி செய்துவிடுகிறதா? எப்படிச் சொல்லி இருக்கிறதோ அப்படித்தான் செய்யவேணும்.

ஒருவனுக்குக் காய்ச்சல் என்று வைத்துக்கொள்வோம். அது எப்படி வந்தது தெரியுமோ? நிவாரணம் எப்படி? இதை ஆரோக்ய சாஸ்திரத்தால்தான் அடையலாம். அதன் பிரகாரம் செய்தால் உடம்பு ஸரியாகும். अतीन्द्रियार्थे शास्त्रं प्रमाणम् அல்லவா? சொன்னபடி செய்யாவிட்டால் பலன் கிடைக்காது. இந்த தர்மத்துவாரம் தெரிகிறது இல்லை தற்கால வித்தையால்.

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वभाव नियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥

நம்முடைய தர்மப்படி நடப்பதுதான் ஸரி. பிறர் தர்மப்படி நடப்பது பயத்தைக் கொடுக்கின்றது. பரதர்மம் கஷ்டம். கீழ்அதிகாரி மேல் அதிகாரத்தைச் செய்தால் வேலை போய்விடும். ராஜாவே அந்த வேலையை ஏற்படுத்தினால் அது தர்மம் ஆகும். அதேமாதிரியாய் வேதஅத்யயனம் யார் செய்யவேண்டுமோ அவன் விடுகிறது; யார் செய்யக்கூடாதோ அவன் செய்கிறது. இதில் என்ன உண்டாகும்? இரண்டுபேருக்கும் பாபம் ஸம்பவிக்கிறதுதான் பலம். படிப்பதில் மாத்திரம் புத்தி இருக்கின்றது. அதில் என்ன சொல்லியிருக்கின்றது என்று தெரிந்துகொண்டு அதன்படி நடக்க இஷ்டமில்லை.

பிராம்மணன் வேத அத்யயனம் செய்யாவிட்டால் விராத்தியன் ஆகிறான் என்று சொல்லி இருக்கின்றது. अनधीयाव्रात्या भवन्त । இப்படித் தாறுமாறாய் பிரவர்த்திப்பதினால் தான் லோகத்தில் துர்பிக்ஷம் ஏற்படுகிறது. இதற்கு ராமாயணத்தில் ஒரு கதை இருக்கின்றது.

ஸ்ரீராமர் ராஜ்யபாரம் வஹித்துக்கொண்டுவரும்காலத்தில் ஒரு பிராமணனுக்கு பிள்ளை இறந்துபோய்விட்டது. அந்தப் பிள்ளையின் பிரேதத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீராமரின் அரண்மனையின் வாயிலில் போட்டு பிரலாபித்து அழுதுகொண்டு தனது குமாரன் இறந்ததற்கு ராஜாவான ராமன்

தான் காரணமென்று அழுதான். ஏனென்றால் அந்த ராம ராஜ்யத்தில் பெரியவர் முன்னிலையில் சிறியவர் இறந்ததே இல்லை. மேலும் தசரதசக்கிரவர்த்தி ராஜ்யபாரம் செய்யும்போது இப்பேற்பட்ட துக்கங்கள் ஸம்பவித்ததில்லை என்று சொல்லி அழும் பிராமணனுக்கு ஸமாதானம் சொல்லி, அவனை திருப்தி செய்வதற்காக யமனுடன் சண்டைசெய்து பிள்ளையின் உயிரைத் திருப்பிக்கொண்டு வருவதாக வாக்களித்து யுத்த ஸந்நத்தமாய்க்கொண்டிருந்தார். அந்தக்காலத்தில் அசரீரி ஒன்று சம்புகன் என்ற சூத்ரன் தனக்கு விதித்த நெறி தவறி தபசு செய்வதால், இந்த பிராமணன் மகன் இறந்தான் என்று சொன்னது, அதைக் கேட்டு ஸ்ரீராமர் அந்த சம்புகனைத் தேடி ஆக்ஞை செலுத்தினதாகச் சொல்லியிருக்கின்றது. இப்படி உலகத்தில் ஏற்படும் துர்ப்பிக்ஷாதி ஹிம்ஸைகளுக்கு ராஜன்தான் காரணம் என்று சொல்லி இருப்பதை ஒப்புக்கொண்டு, ஸ்ரீராமர் அதை நிவர்த்திக்கப் பிரயத்தினம் செய்திருக்கிறார். இந்தக் காலத்தில் அலதை யாராவது சொன்னால் அவன் திரும்பி வருவதே கஷ்டமாய் முடியும். அதர்மம் நடந்தால் அதை ஜனங்கள் அனுபவிக்கிறார்கள்.

யார் யார் எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடக்க வேண்டும். இல்லாவிட்டால் துக்கம் ஸம்பவிக்கும். இதை நடத்த தற்காலம் ராஜா இல்லை. ராஜசிக்ஷை ஏற்பட்டால் ஒருவேளை பவித்திரத்துவம் ஏற்பட்டு அதனால் பிரஜைகள் ச்ரத்தை அடையலாம். சிக்ஷையில்லாவிட்டால் ஈசுவரனுடைய வார்த்தைக்கு விரோதமாய் எவர்கள் நடந்துபோகிறார்களோ அவர்களுக்கெல்லாம் ஈசுவரனுடைய நிக்ரஹம்தான் ஸித்தம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அர்ஜுனனுக்குக் கீதையில் சொன்னதெல்லாம் என்ன? ஸ்வதர்மானுஷ்டானத்தை அல்லவா? அவனுக்கு மாத்திரமா சொன்னார்? ஸகலருக்கும் சொல்லவில்லையா? நான் பிக்ஷை எடுத்தாவது ஸாப்பிடுகிறேன் என்று சொன்ன அர்ஜுனனுக்கு ஸ்ரீபகவான் சொன்னது என்ன? பைக்ஷ்யம் க்ஷத்திரியதர்மம் அல்ல; உன்னுடைய ஸ்வதர்மத்தைச் செய் என்றல்லவா உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அர்ஜுனனுக்கு, யுத்தகளத்தில் பிசாசஆவேசம்போல் நமக்கு வருகிறமாதிரி பிரமாதம் வராமல், மோக்ஷஸாதனமான வைராக்கியம் வந்தது. அந்த வைராக்கியத்தைக் கைக்கொண்டு ஸ்வதர்மத்தில் தீர்க்க பிடிவாதத்துடன் நடந்தால் சுகப்பிராப்தி வரும்.

நம்மவர்களுக்கோ எடுத்ததெல்லாம் ஸந்தேகம் ஆகையால் நமக்குஒரே வழிதான் இருக்கிறது. தர்மாதர்மவிவேகம், சாஸ்திரசோதனையால்தான் கிடைக்கின்றது. அந்த வியவஸ்தை அதனால்தான் சொல்லப்படுகின்றது. யாரோ ஒரு ஸபையில் தமிழில் பேசுகிறேன் என்று சொன்னாராம். அவரைப் பேசக்கூடாதென்று உட்காரவைத்துவிட்டார்களாம். எது நியமமோ அதன் பிரகாரம் நடந்தால்தானே முடியும். விருத்தமாய் நடந்தால் முடியுமா?

நம்மவர்களில் சிலர் ஸந்த்யாவந்தனத்திற்கு பலன் என்னவென்று கேட்கிறார்களாம். ஒவ்வொரு மதத்திலும் அந்தந்த மதத்திற்குத் தகுந்தபடி, நிபந்தனைகள், நிர்பந்தங்கள், உண்டல்லவா? துருஷ்கன் ஐந்து வேளை நமாஸ் தொழுகிறான். ஜைன, பௌத்தர்களுக்கும் அப்படியே. சைத்யவந்தனம் பண்ணும்படி பௌத்தர்களுக்கு உத்திரவு. வெறும் சுவற்றைப் பார்த்து நமஸ்காரம் பண்ணினால் என்ன

பலன் வந்துவிடும்? தப்த சிலாரோஹணம், கேசோல்லுஞ்சனம் முதலியவை ஜைநருக்கு விதிக்கப்பட்டிருக்கின்றது. இதில் எவ்வளவு கஷ்டம் இருக்கின்றது. காய்ந்த கல்லின் மேல் ஏறி நிற்பதென்றால் எவ்வளவு கஷ்டம். நமக்கு ஒரு மயிர் பிடுங்குவதென்றால் எத்தனை கஷ்டம். கேசம் முழுவதையும் இப்படி சிம்டா போட்டுப் பிடுங்கினால் எத்தனை வேதனை உண்டாகும்! இதிலெல்லாம் என்ன பலன் கிடைக்கின்றது?

நமது ஸந்த்யாவந்தனத்தில் இத்தனை கஷ்டமான காரியங்கள் ஒன்றும் கிடையாது. கேசோல்லுஞ்சனம் செய்தால் என்ன புண்ணியம் வருகிறது. இதை யாரோ சொல்லியிருக்கிறார் என்று நம்பித்தானே அந்த மதஸ்தர்கள் அதைப் பின்பற்றி நடக்கின்றார்கள். சைந்தியவந்தனாதிகளைச் செய்தால் புண்ணியம் வருகிறதென்று எங்கே சொல்லியிருக்கிறது? யாரோ புத்தன் என்று ஒருவனும்; அதேமாதிரி அர்ஹன் என்று மற்றொருவன் இவர்கள் சொல்லி இருக்கிறார்கள். இவர்கள் யார் மனுஷ்யர்கள்தானே? இல்லை இவர்கள் சர்வக்ஞர்கள் என்று ஒப்புக்கொண்டால், இவர்கள் சர்வக்ஞர் என்று எப்படித் தெரிந்துகொண்டோம். சாஸ்திரம் செய்ததால்தானே அல்லவா? இவர்கள் செய்த சாஸ்திரம், பிரமாணமுள்ளது என்று எப்படித் தெரிந்தது? சர்வக்ஞத்துவத்தால் என்று பதில் சொன்னால் அந்யோந்யாச்ரயதோஷம் வருகின்றது. இப்படி இருப்பதையே நம்பி அந்த மதஸ்தர்கள் நடந்துவருவதைப் பார்த்தும் ஒரு தோஷமுமில்லாமலும், ஸர்வேச்வரனான சர்வக்ஞனால் செய்யப்பட்ட வேதசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் கர்மாக்களைச் செய்வதில் என்ன பலன் என்று கேட்டும் நம்மவர்களை என்னென்று சொல்வது.

போகட்டும் இவர்கள் எல்லாம் ஈச்வரர்கள் என்று சொல்லிவிடுவோமென்றாலோ. அவனே முன்சொன்ன வேதத்திற்கு, பின் விரோதமாய்ச் சொன்னால் அது பிரமாணம் என்று எப்படி ஒத்துக்கொள்வது? வேதத்திற்கே விரோதமாய்ச் சொன்னால் அது எப்படிப் பிரமாணம் ஆகும். வேதத்திற்கு விரோதமாய் அந்த வேதம் சொன்ன ஈசுவரனே வந்து சொன்னாலும் பிரமாணம் ஆகாது. லௌகிக நியமத்திலும் அப்படியேதான். ஒரு சட்டத்திற்கு விரோதமாய் இன்னொரு சட்டம் ஏற்படமுடியுமோ. அப்படி காலத்தை உத்தேசித்து அல்லது வேறு காரணங்களினால் மாற்றுவதானால், அதை கஜட்டு முதலியவைகளில் விதிப்பிரகாரம் பிரசுரம் செய்தல்லவோ மாற்றவேண்டிவருகிறது.

இந்த புத்தர் ஈசுவராவதாரம் என்று எங்கே சொல்லி இருக்கின்றது? சாஸ்திரங்களில். அந்த சாஸ்திரங்களிலேயே தைத்தியர்களின் பலத்தைக் குறைக்கவேண்டி இந்த மாதிரி வஞ்சக போதனை செய்ததாகச் சொல்லி இருக்கின்றது. தைத்தியர்கள் ஈசுவரனை ஆராதித்து அவருடைய பிரஸாதத்திற்கு பாத்திரர்களாகி, அனேகவித சக்திகளைப் பெற்று சக்தி வந்ததும் "शक्तिः परेषां परिपीडनाय" என்றபடி மற்றவர்களை ஹிம்ஸிக்கத்தொடங்கினதால் அவர்களுடைய பகவத் ப்ரீதியை நீக்கி வந்த மதமல்லவா பௌத்தமதம்? இந்த அவதாரம் விஷ்ணு எடுத்துக்கொண்டு லோகரக்ஷணார்த்தம் துஷ்டர்களை சிக்ஷை செய்ய நாஸ்திகபோதனை செய்தார். ஸத்தியமான மதமாய் இருந்தால் அதிலேன் வித்யாஸம்? புத்தருக்கு நான்குபேர் சிஷ்யர்கள் நான்கு பேர்களும் நான்கு விதமாய்ச்சொல்லி இருக்கிறார்கள் இதினாலேயே அவர்களின் குருவின் வஞ்சகம் தெரியவில்லையா? இவர்தானே செய்தார் என்றால் இது எப்படி வந்தது?

நமக்கு க்ஷேமம் வேண்டும். தரித்திரம் அதிகமாகி விட்டது. இதற்கு ஏதாவது நாம் செய்துகொள்ளவேண்டும், என்று யோஜித்துக்கொண்டு ஏதேதோ செய்ய ஆரம்பிக்கிறார்கள். இப்பொழுது நாம் அனுபவிக்கும் அனுபவம் எந்த கர்மத்தினால் வந்தது? எதன் பலன்?

ஒருவன் வியாபாரம் செய்து பலநாள் பழகி அனேக வருஷம் லாபம் எடுத்துப் பின்னால் ஒரேவருஷத்தில் எல்லாம் நஷ்டமாய்ப் போய்விடுகிறதைப் பார்க்கிறோமே! அது எப்படி? வியாபாரத்தில் அதிகப்பழக்கம் இல்லாதபோது லாபம் வருவானேன், நன்றாய், நன்றாய்ப்பழகி தரமாக வேலை செய்யும்போது நஷ்டம் வருவானேன்? வித்யாப்யாஸம் செய்தோம், நன்றாய்த் தேறினோம், வேலை கிடைக்கவில்லை ஏன்? ஸ்வாமியின் தயவு அவ்வளவுதான். நம்முடைய புத்தியால் ஸாதித்துவிடுவோம் என்று நினைப்பதெல்லாம் இப்படித்தான் முடியும். எல்லாம் விபரீதம் தான்.

புத்தியால் ஸம்பாதிப்பது வாஸ்தவமானால், எல்லாருக்கும் புத்தி இருக்கிறது, எல்லாரும் சுகம் ஸம்பாதித்துவிடலாமே! முடியுமோ? ஒருக்காலும் முடியாது. ஆகையால் சாஸ்திரம்தான் பிரமாணம். மற்றமதப்பிரகாரம் நாம் நடக்கமுடியாது. எந்தெந்த உள்நோக்கத்தை உத்தேசித்து சொல்லப்பட்டிருக்கின்றனவோ நமக்குத் தெரியாது. ஆகையால் ஸ்வதர்மம்தான் நமக்கு சிரேஷ்டம். அதுதான் வேண்டும். பரதர்மத்தை நினைக்கவுங்கூடாது. பரதர்மத்தை நன்றாய்ச் செய்வதைவிட நம்ம தர்மத்தை சுமாராகச் செய்வது சிரேஷ்டம்.

நான்கு வர்ணத்தவர்கள் தர்மாதிகாரிகள். ஆகையால் கர்மாதிகாரிகளும் அவர்களே. அப்படி இருந்தால்தான்

லோகம் சுபிக்ஷமாய் இருக்கும். நமக்கெல்லாம் வேதம் தான் பிரமாணம். இதில் இன்னொரு கக்ஷி இருக்கிறதாம். வேதத்தை நம்புகிறோம். இந்த ஸ்மிருதி முதலியவைகளை நம்புகிறதில்லை. இதை எல்லாம் பிராம்மணன் தனக்கென்று செய்துக்கொண்டது என்று சொல்லுகிறார்களாம்.

இவர்களுக்கு வேதம் அர்த்தமாகிவிடுகிறதா? எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு விட்டார்களா? कन्यां सर्वत्र वर्जयेत् என்று கன்யாமாஸத்தில் க்ஷவரம் செய்துக்கொள்ளக்கூடாது என்று நிஷேதித்த வேதவாக்கியத்தை பிரௌடா விவாஹத்துக்கு ஆதாரமாகக்கொள்வதும், नावेव सिन्धुं दुरितात्यग्निः என்ற வாக்கை ஸமுத்திரயானத்திற்கு மேற்கோளாகக் கொள்வதுமே, நமக்கு வேதத்தை, நாமாகவே அறிந்து கொள்ள யோக்கியதை இல்லை என்று விசதமாகின்றது.

ஸ்வேச்சாநிரோதத்திற்காக ஏற்பட்ட சாஸ்திரத்தை ஸ்வேச்சானுகூலமாகவா அர்த்தம் செய்துக்கொள்வது? மதம் பிடித்துப் போகிற யானையைத் தடுத்து நம்ம வழி போகச் செய்யும்படி உபயோகப்படும் அங்குசம்போலல்லவா இருக்கவேண்டும் நமக்கு சாஸ்திரம்? அதை விட்டு நமது இஷ்டப்படி நடக்கவா சாஸ்திரம் ஏற்பட்டிருக்கின்றது? சாஸ்திரமே வேண்டியதில்லையே; அவனவனிச்சையே போதுமே. ஆகையால் சுயேச்சையாய் நடப்பதைத் தடுத்து சாஸ்திரப் பிரகாரம் நடப்பதுதான் தர்மம். சாஸ்திரங்களில் செய்யென்று சொல்லியவைகளில் எவ்வளவு ஸாத்தியமோ அவ்வளவு செய்யவேண்டும். செய்யாதே என்று நிஷேதித்தவைகளையெல்லாம் விட்டுவிட வேண்டும். இதுதான் தர்மம். மற்றவழி அதர்மம்.

நமக்கும் பசுக்களுக்கும் என்ன வித்யாஸம்? அவைகளுக்கு நிபந்தனைகள் இல்லை. நமக்கு அப்படி வரவேண்டு

மோ! பசுக்களுக்கு ஸமானமாய் ஆகவேண்டுமென்ற இச்சைப்படுவதா?

வேறு சிலர் இந்த சாஸ்திரீய நிபந்தனைகளை விட்டுவிட்டு சில சபைகளில் சேர்ந்துகொண்டு புதிய நிபந்தனைகளை ஏற்படுத்திக்கொள்ளுகிறார்களாம். ஒன்றை விடுவானேன், மற்றொன்றை ஸ்வீகரிப்பானேன்? இந்தப் புதிய நிர்பந்தங்கள் பலனைக்கொடுக்கும் என்று எப்படித் தெரியும்?

வேறு சிலர் இந்த நிபந்தனைகள் எல்லாம் பிராம்மணர்கள் தங்கள் க்ஷேமத்திற்காக ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்களாம். வியாபாரம், கிருஷி, ராஜ்யபாரம், கைத்தொழில் முதலிய ஸகல தன ஸம்பாதன மார்க்கங்களை எல்லாம் பிராம்மணரல்லாதவருக்குக் கொடுத்துவிட்டு, கேவலம் ஆத்மபுத்தி பிரஸாதகமான சித்தசுத்திக்கு வேண்டிய கர்மாக்களை மட்டும் தனக்கு வைத்துக்கொண்டிருக்கிறான். புத்திநைர்மல்யம்தான் பலன். இதனால் பிராம்மணன் மற்றவர்களை எப்படி மோசம் செய்துவிட்டான் என்பது தெரியவில்லை.

या न सा माया என்பதுபோல் या वित्त सा विद्या. எது ஞானமோ, எது அஞ்ஞானத்தை நாசம் செய்கிறதோ, எது ஆத்மா இன்னது என்ற ஞானத்தைக் கொடுக்கிறதோ அதுதான் வித்யா. பூகோளம், ககோளம், ரஸாயனம் முதலியவை தெரிந்தால் என்ன ஸாதகம்? தெரியாததால் என்ன பாதகம்? நமது ஆறு சாஸ்திரங்களும் அப்படிப்பட்டவைகளா? அவைகள் புத்தியை விளக்கி விவேகத்தை உண்டுபண்ணுகின்றனவல்லவா! வெறுமனே இந்த விருத்தாந்தப் பத்திரிகைகளை வாசித்தால் என்ன குணம்?

वङ्गाः कथं अङ्गाः कथं इति नियुङ्क्ते वृथा देशान् ।
कीदृक्कृतान्तपुरमिति कोपि न जिज्ञासते लोकः ॥

வங்க தேசமெப்படி இருக்கிறது, அங்க தேசமெப்படி இருக்கிறது என்று ஸதா விசாரித்துக்கொண்டு, புத்திக்கு விக்ஷேபத்தைச் செய்துகொள்ளுகிறார்கள். ஆனால் யமபுரம் எப்படி இருக்கிறதென்று ஒருவரும் கேட்கிறதே இல்லை. பத்திரிகைகளை வாசித்து காலங்கழித்தால் என்ன குணம்? தற்காலத்தில் ஒரு பத்திரிகையில் ஸசேஷம் என்று ஒரு கதை எழுதிவிட்டால் மறு ஸஞ்சிகை வரும்வரையில் பிராணனே போய்விடும்போல் இருக்கின்றது. உலகத்தில் இருக்கும் ஸகல வஸ்துக்களைப்பற்றியும் தெரியும், ஆனால் 'நான்' என்ற வஸ்துவைப்பற்றி மாத்திரம் ஒன்றும் தெரியாது. இப்பேற்பட்டவர்களைப்பற்றி என்ன சொல்வது?

எந்த வித்தையால் அஞ்ஞானம் போகிறதோ அது அல்லவா வித்தை. ஞானம் என்பது என்ன? இந்திரியங்களுக்கு சாந்தியைக் கொடுப்பது அல்லவா? (प्रशमकरं यत् इन्द्रियाणां तत् ज्ञानम्) சாந்தி இல்லாமல் இந்திரியங்களுக்கு வேலையைக் கொடுத்து தேகத்துக்கு துர்பலத்தைக் கொடுத்தால் தர்ம ஸம்பாதனம் எப்படிச் செய்ய முடியும்? சரீரம் தர்மஸம்பாதனத்திற்கு முக்கிய ஸாதனம் அல்லவா? "शरीरमाद्यं खलु धर्म साधनम्॥".

ஆகையால் நம் புத்தியைக் கொண்டு செய்வதெல்லாம் குணமாகாது. சாஸ்திரமே பிரமாணம். இந்த விஷயத்தில் ஒரு கதை சொல்லுகிறார்கள். ஒருவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதனுடைய ஜாதகத்தைப் பார்த்ததில் அதற்கு ஜலத்தில் மரணம் என்று தெரியவந்தது. பிதா அந்தக் குழந்தையை ஜலத்தின் ஸமீபத்திலேயே போகாமல் செய்து

வந்தான். குறித்த தினத்தில், ஸாப்பிடப்போன பையன், ரசத்தைத் தனது கலத்தில் நிறைய வார்த்துக்கொண்டு அதில் மூக்கை நட்டுக்கொண்டு இறந்தானும். ஈசுவரனுடைய பிரேரணையை யார்தான் தடுக்க முடியும்?

அப்படியே இன்னொரு கதை. ஒரு பிராமணனிடத்தில் ஒரு பறையன் வயல் முதலியன உழுது பயிரிட்டுக்கொண்டு இருந்தான். இந்த பிராமணனுக்கு அவனிடத்தில் வெகு ப்ரீதி. அவனும் நல்ல சிரத்தையோடு நடந்துவந்தான். காலகதியில் அவன் இறந்துபோய்விட்டான். ஒருநாள் இந்த சிஷ்டனான பிராமணன் நதியில் ஸ்நானம் செய்துவிட்டு வீடு வரும்வழியில், அந்த பறையனுடைய உருவம் தோன்றியது. எங்கே வந்தாய்? என்ன சமாசாரம் என்று கேட்க, அவன் ஸத் பிராமண ஸேவாபிரபாவத்தால், தான் யமதூதனாய் இருப்பதாயும், அன்றைக்குக் கோயில் திருப்பணி செய்யும் ஒருவனுடைய உயிரைக்கொண்டுபோக வந்திருப்பதாகவும் சொன்னான். அந்தத் திருப்பணிக்காரன் தனக்கு மிகவும் பிரியமான சினேகிதனானதால் மரணத்திலிருந்து தப்புவிக்க உத்தேசித்து மரணத்தின் நிமித்தம் என்ன என்று கேட்டான். கல் இடிந்து விழுந்து இறப்பதாய்த் தூதனால் தெரிந்துகொண்டு வீட்டுக்குப்போய், மற்ற யாருக்கும் சொல்லாமல் அந்த சினேகிதனை ஒரு அறையில் போட்டு பூட்டிவிட்டு சாவியை எடுத்துக்கொண்டு வெளியே போய்விட்டான். அன்றைக்கு மத்தியானம் வேலையில் முக்கியமானது ஒன்று மேஸ்திரி இருந்தே ஆகவேண்டியதாய் இருந்ததால் எங்கும் தேடி கடைசியில் கண்டுபிடித்துக் கதவைப்பெயர்த்துவிட்டு மேஸ்திரியை வெளிப்படுத்தி வேலையிடத்திற்கு கூட்டிப்போகப்பட்டான். போனதும் கல் முறிந்துவிழ மேஸ்திரி மாண்டுபோனான். தூதன் சொன்ன காலம்

கடந்ததும் பிராமணன் நதியோரத்திலிருந்து வீடுநோக்கி வரும்போது அதே பறையன் உருவத்தால் நடந்ததைத் தெரிந்துகொண்டு துக்கித்ததாகக் கதை. இதனல் ஈசுவரேச்சையை மாற்ற யாராலும் முடியாது என்று தெரிகிறது.

மைசூர் ஸம்ஸ்தானத்திலிருந்து ஒரு ஸ்திரீ எம். ஏ. பரீக்ஷைக்கு சிமைக்குப்போனுள் முதல் வருஷத்தில் பரீக்ஷாக்ருஹம் போனதும் ஒரு மாந்த்யம் அதாவது பிரமை ஏற்பட்டு ஒன்றும் செய்யமுடியாமல் திரும்பிவந்துவிட வேறியது. இரண்டாம் வருஷமும் அப்படியே ஆயிற்று. மைசூர் திருமபிவந்துவிட்டாள். போனதும் மருந்து ஸாப்பிட்டதும்தான் மிச்சம். வியாதி சொஸ்தமாகவில்லை இதுபோலாயிற்று என்று சொல்லவேண்டிவருகிறது.

ஆகையால் நமது யுக்தியால் செய்யும் காரியங்கள் எல்லாவற்றிற்கும் இப்படித்தான் பலன்கள் நிச்சயமில்லை. பகவான் சொன்ன மார்க்கத்தில் போனுல் பலன் ஸித்தமாய் இருக்கிறது. பகவத் சரணுகதியால் கிடைக்காத வஸ்து என்ன இருக்கின்றது?

தேவதை எப்படிக்கொடுக்கின்றது என்ருல் நம்முடைய கர்மம் மூலமாய்த்தான். நாம் போகிற வழி பகவானுடைய அனுக்கிரஹம் கிடைக்கும்படி இருந்தால் அதன் மூலமாய்த்தான் பலன் கிடைக்கின்றது. விபரீத மார்க்கமாய் மனதைப் போகவிடக்கூடாது. நல்லவழியில் போனுல் பலன் நிச்சயமாய்க் கிடைக்கும்.

இப்பொழுது நம்மவர்களுக்கு வேலை இல்லாமல் போனுல் தனம் எப்படி ஸம்பாதிப்பது, தனம் இல்லாமல் போனுல் தேஹயாத்திரை எப்படி நடக்கும் என்று பெருத்த

ஸந்தேஹம் உண்டாயிருக்கிறது. கடுப்பாறையில் தேரை இருப்பதைக்கேட்டிருக்கிறோமல்லவா? அந்தத் தேரைக்கு இத்தனை ஆயிரம் வருஷங்களுக்கு ஆகாரமும், அது இருக்க தீர்த்தமும் யார் கொடுத்தார்கள்? மைசூர் ராஜ்யத்தில் முன்னால் ஜக்கண்ணாசாரி என்று ஒரு சில்ப சாஸ்திரி இருந்தான். அவன் வித்யாசங்கார் கோவில் முதலியன கட்டி இருக்கிறான். அவனுக்கு ஒரு பிள்ளை பிறந்தது. அதன் ஜாதகத்தைச் ஸரியாய் கணிப்பதற்காக, கற்பகிருஹத்தில் இருந்தவர்களை பிள்ளை பிறந்ததும் ஒரு எலுமிச்சம்பழத்தை உருட்டிப்போடும்படி ஏற்பாடு செய்திருந்தான். அவர்களும் அப்படியே செய்தார்கள். ஆனால் அது திரும்பி வந்ததால் மறுபடி எடுத்து வீசினார்கள். இதனால் ஜாதகம் பிசகி, குழந்தை தனக்குப் பிறந்ததல்ல என்று தீர்மானித்து தேசாந்திரம் போய் அனேக கோவில் கட்டி சிவபிரதிஷ்டை செய்துவந்து கொண்டிருந்தான். பிறந்த பையனுக்கு வயது பத்தொன்பது ஆனதும், தகப்பனைத்தேடிக்கொண்டு புறப்பட்டான். சுற்றிக்கொண்டுவந்து ஜக்கணாசாரி புதிதாய்க் கட்டிக்கொண்டிருக்கும் தேவஸ்தானத்தில் வைக்கப்போவதாயிருக்கும் லிங்கம் தூஷிதமாயிருப்பதைக்கண்டு பஹிரங்கமாய் அந்த தோஷத்தை எடுத்துச்சொன்னான். இந்த விஷயமாய் பிதா புத்திரர்களுக்கு வாக்குவாதம் ஏற்பட்டு சபதம் செய்துகொண்டார்கள். அந்த லிங்கத்தைத்தட்டிப் பார்த்ததில் அது உடைந்து அதனுள்ளே இருந்து ஒரு தேரையும் கொஞ்சம் ஜலமும் கண்டார்கள். பிரகிருதவிஷயத்தில் இருந்த தேரைக்கு இத்தனை நாள் ஆகாரம் யார் கொடுத்தார்கள்? இந்த ஜலத்தை யார் அங்கு வைத்தார்கள்? இதெல்லாம் ஈசன் செயல் அல்லவா. இந்தத்தேரைக்கு ஆகாரம் கொடுக்கவில்லையா?

நமக்கு ஸாப்பாடு கர்மானுஸாரமாய் நிச்சயமாய்க் கிடைக்கின்றது. ஒருவன் தரித்திரனாய் இருக்கவேண்டுமானால் எவ்வளவு பணம் கொடுத்தாலும் அவன் தரித்திரனாகவேதான் இருப்பான். ஸமுத்திரம் பெரியதுதான். நாம் ஒரு குடம் மட்டும் கொண்டுபோனால் குட அளவு நீர்தானே கொண்டுவர முடியும். கிணற்றில் போட்டு சேந்தினாலும் அவ்வளவுதான் கிடைக்கும். நாம் வனாந்திரத்திலிருந்தாலும் பெரிய பட்டணங்களிலிருந்தாலும், நமது கர்மானுஸாரப்படி வருவது வந்தே தீரும்.

ஸந்தோஷம் நமக்கு வருகிறது. சில ஸமயத்தில்தான் வருவானேன்? நாமாய்த் தேடிவிட முடியுமென்றால் எப்பொழுதும் இருக்கிறதுதானே? பகவத் பிரஸாதத்தால் தான் வருகிறது. அவன் சொன்னபடி நடக்கவேண்டியது, துஷ்கிருத்யம் செய்யப்படாது. அப்படியானால் சுகம் நிச்சயம்.

त्रिभिर्वर्षैस्त्रिभिर्मासैस्त्रिभिर्पक्षैस्त्रिभिर्दिनैः ।
अत्युत्कटैः पुण्यपापैः इहैवफलमश्नुते ॥

என்றபடி நம்முடைய பலிஷ்டகர்மங்களின்படி நமக்கு பலன் இந்த ஜன்மத்திலேயே வரலாம்.

ராவணன், முதலில் தெய்வபலத்தை ஸம்பாதித்துக் கொண்டு ஸகல ஐச்வர்யத்தையும் அடைந்தான். பிறகு அவனுடைய தௌஷ்டியத்தாலேயே ஸகலமும் நசித்துப் போய் அவனும் இறந்தான். இதெல்லாம் அவனுக்கு ஒரே ஜன்மத்தில் வந்தன.

இப்பொழுது பகவத் பிரஸாதம் இல்லை; துஷ்டத்தனம் மட்டும் இருக்கின்றது. சீக்கிர நாசத்திற்குக் கேட்பானேன்?

தசரதன் தேவஸஹாயன், அவனுக்குக்கூட பிள்ளை இல்லை. புத்திரகாமேஷ்டி செய்து பகவானுடைய அனுக்கிரஹம் பெற்று புத்திரர்களை அடைந்தான். ஸ்ரீகிருஷ்ணன் பகவானுடைய அவதாரம். அவருடைய நாமத்தை ஜபித்து அவனை ஆராதித்து இப்பொழுது பிள்ளையில்லாமல் போனால் சந்தானகோபால மந்திரத்தை உபதேசம் செய்துக் கொண்டு உபாஸனை செய்து புத்திரஸம்பத்தை உலகத்தில் அடைவது வழக்கமாய் இருக்கின்றது. அவர்கூட தனது மகிஷி ஜாம்பவதி புத்திரன் வேண்டுமென்று யாஜித்தபோது ஸ்ரீகிருஷ்ணனும் அவளுமாய் உபமந்யு ரிஷியிடம் போய் ஸ்ரீ சிவஸஹஸ்ரநாமமும், பஞ்சாக்ஷரமும் உபதேசம் பெற்றுக் கொண்டு கந்தமாதனபர்வதத்தில் தபசு செய்து பெற்றதாகச் சொல்லி இருக்கிறது. இந்த விஷயம் கிருஷ்ணனுக்குத்தெரியாததா? தானே செய்ய முடியாததா! அவரே லோகோத்தாரத்திற்காக நடத்திக்காட்டி இருக்கிறார். அதே மாதிரிதான் ஸாந்தீபனி முனிவரிடம் போய் குருவாய் அவரை வரித்து அத்யயனம் செய்திருக்கிறார்.

கீதையில் அவரே,

**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥**

என்று சொல்லுகிறார். அவரே கர்மானுஷ்டானம் செய்கிறார் என்றால் என்னத்திற்காக? லோகஹிதார்த்தமாகத்தான், அவர் செய்து காட்டினாலுங்கூட நாம் செய்கிறதில்லை. அவரும் விட்டுவிட்டால் கேட்கவேண்டியதே இல்லை. அதுவே காரணமாகும் கர்மலோபத்திற்கு. ஞானியானாலும், அக்ஞானியானாலும் கர்மம் செய்யவேண்டும் என்று சாஸ்திரம் சொல்லுகின்றது. எந்த விஷயமானது பிரத்யக்ஷமாயோ.

அல்லது ஊஹையாலோ தெரியாதோ அதைப்பற்றிச் சொல்வதுதான் வேதம்.

प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायो न वुध्यते ।
एनं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता ॥

ஒருவனுக்கு நிரம்ப தனம் வேண்டுமென்று வைத்துக் கொள்வோம். அப்பேற்பட்டவனை வாயுயாகம் செய்யச் சொல்லி இருக்கின்றது. ஸாபத்து வந்தவர்கள் என்ன செய்தார்கள் என்று கேட்டால், யாருக்கு இல்லையோ அவர்கள் செய்யட்டும். தற்காலத்தில் பணம் இருக்கிறவர்களும் லோகாந்தரத்தில் செய்திருக்கவாம். இதேமாதிரி பிள்ளை முதலியவைகளுக்கும், இப்படித்தான். ஒன்று, இரண்டு, மூன்று ஜன்மம் எடுத்து கிரமேண பலப்படுத்தி, பூர்ணத்துவம் கிடைக்கின்றது. அப்படித்தான் பிரம்மத்துவத்திற்கும். புண்ணியம் ஏற்படவேண்டும். லோகாந்தரத்திற்கு சாஸ்திரம்தான் பிரமாணம் சாஸ்திரத்தை சோதித்து வழி தெரிந்துகொண்டு, அதன்படி செய்தால் லோகாந்தரத்திலாவது அனுபவிக்கலாம். இங்கேயே இல்லாமற்போனல் அங்கே எப்படி முடியப்போகிறது?

இன்னொரு வித ஸம்சயம் ஆஸ்திக்கியாதிக்யத்தால் வருகின்றது. அதென்ன என்றால், பவிஷயத் புராணம் முதலான புராணங்களில் கலியுகத்தில் ஜாதி சங்கிரமம் முதலிய துஷ்கிருத்யங்கள் பரவப்போகின்றன, பிராம்மணர்கள் ஸந்த்யாவந்தனுதிகளை விட்டுவிடுவார்கள், சுரா பானுதிகளை ஏற்றுக்கொள்வார்கள் என்று அநேக அனுசாரங்களைப் பற்றிச் சொல்லி இருக்கின்றதே, இவைகளோ ஸித்தமாய் நடக்கப்போகின்றனவே, என் வீணுய் இந்த ஸந்தியாவந்தனுதிபாரத்தைத் தாங்கவேண்டுமென்று கேட்கிறுர்கள்.

இதர்குப் பரிகாரம் என்னவென்றால், இப்பொழுது கலி 5000 வருஷங்கள்தான் ஆயிருக்கின்றது. இப்பொழுதே ஸந்தியாவந்தனாதிகள் விட்டுவிடப்பட்டுப் போகும் என்று சொல்லப்படவில்லை. தவிர இந்தப் புராணங்களில் மேல் கண்டபடி ஏன் சொல்லப்பட்டது என்றால், கலியுகம் வந்து விடும். நீங்கள் ஜாகரூகர்களாய் இருக்கவேண்டும் என்று எச்சரிக்கைக்காகவே தவிர, தர்மகர்மங்களை விட்டுவிடத் தூண்டுவதற்காக அல்ல. தர்மகர்மாதிகளை விட்டதால்தான் நம் தேசத்தில் துர்பிக்ஷமும், ரோகங்களும், ஜலபிரவாஹத்தால் நாசமும் ஏற்படுகிறது.

ராவணன் தனது துர்நடத்தையால் கெட்டான். ஆனாலும் அவன் ஸாமான்யன் அல்ல. தனது தலைகளை ஒவ்வொன்றாய் அறுத்து ஈசுவரார்ப்பணம் செய்து, அதனால் பகவத் பிரீதியை ஸம்பாதித்தான். ராவணன் கெட்டவன் என்றால் ராமரை உத்தேசித்துக் கெட்டவனே தவிர வேறல்ல. ஸ்ரீராமர் தர்மாத்மா, ஸத்யஸந்தர், புண்ணியஸ்வரூபி. ராவணன் கெட்டவன், பாபி, இவ்வளவுதான்.

இந்தக் காலத்தில் பிராம்மணத்துவேஷம் வந்திருக்கின்றது. அப்படி வருமென்று மத்ஸ்ய புராணத்தில் சொல்லி இருக்கின்றது. ஏன்? இவர்கள் கெட்ட குணத்தால். பிராம்மணேதரனும் செய்யத்தகாத காரியத்தை பிராம்மணன் செய்யத் தயாராகிறான்.

நாங்கூனேரி என்ற கிராமத்தில் நாம் சஞ்சரித்துக் கொண்டிருக்கும்போது ஒரு கவுண்டன்,

दैवाधीनं जगत्सर्वं मन्त्राधीनं तु दैवतम् ।
ते मन्त्रा ब्राह्मणाधीना ब्राह्मणो मम देवता ॥

என்ற சுலோகத்தைச் சொன்னான். இதேமாதிரி சம்பு ராமாயணத்தில் இரண்டாவது சுலோகத்தில் போஜராஜன் சொல்லி இருக்கிறான்.

उच्चैर्गतिर्जगति सिद्ध्यति धर्मतश्चेत्
तस्याप्रमा च वचनैः कृतकेतरैश्चेत् ।
तेषां प्रकाशनविधा च महीसुरैश्चेत्
तानन्तरा हि निपतेत् क नु मत्प्रणामः ॥

இதையெல்லாம் பிராம்மணர்களே செய்தார்களா? அவர்களே செய்தார்கள் என்று வைத்துக்கொண்டாலும், அவைகளைப் பிரசாரம் செய்தவர்கள் எல்லாம் பிராம்மணர் அல்லாதவர்கள்தானே. அவர்களுக்குக் கிடைத்ததெல்லாம் தானபத்திரங்கள்தானே.

போகட்டும். செய்த புஸ்தகங்கள் எல்லாம் பிராம்மணர்களாலேதானா? மாந்தாதா என்ற ராஜன் "கர்மவிபாகம்" என்ற பெரிய கிரந்தம் செய்திருக்கிறான். அதில் பிராம்மணர்களை புகழ்ந்திருக்கிறான். இப்படியேன் ஏற்பட்டது? இதுவும் பிராம்மணன் செய்துவிட்டு அரசன் பெயரை வைத்து பிரகாசிக்கப்படுத்தப்பட்டது என்று சொல்லக்கூடும். அப்படியானால் இதையேன் தடுக்கவில்லை? இதெல்லாம் அல்ல காரணம். பிராம்மணன் மற்றவர்களின் சிரேயோவிருத்தியை பிரார்த்தித்துக்கொண்டிருந்ததால்தான்.

இப்பொழுது ஐகமத்யம் வேணும் என்று பேச்சு மட்டும், பண்ணுவது எல்லாம் துவேஷகாரியம். பரஸ்பர ஸஹாயம்போச்சு, இவர் ஸஹாயம் அவருக்கில்லை, அவர் ஸஹாயம் இவருக்கில்லை. ஐகமத்யம் எங்கிருந்து வரும். கிழவனும் அவனுடைய நான்கு புத்திரர்களும் என்ற கதை தெரியாதவர்

கள் இல்லை. ஒருவனுக்கு பசி என்று வைத்துக்கொள்வோம். அதற்கு உபசமனம் இன்னும் நான்குமைல் ஓடுகிறதோ. இந்த விபரீத நிஷ்கிருதி எதற்காக? பிராம்மணனுடைய ஸஹாயத்தால் இத்தனை நாள் முன்வந்தவர்கள் இப்பொழுது மட்டும் கெட்டுப்போவார்களோ? இப்பொழுது என் இந்த கிருதக்னதாபுத்தி வந்திருக்கின்றது. க்ருதக்னே நாஸ்தி நிஷ்க்ருதி: என்று சொல்லி இருக்கின்றது. அபத்யம் செய்தால் நோய் வருகின்றது. மருந்து சாப்பிடவேண்டாமா? அதற்கு பதிலாய் மேலும் அபத்யமா செய்கிறது? ஆகையால் கலியுகத்தில் கர்மத்தை விடாமல் இன்னும் அதிக ஜாகரூகமாய் இருந்துகொண்டு கர்மத்தைச் செய்துகொண்டுவரவேண்டும்.

ஜாக்கிரதையாய் இருந்தபிறகு பலன் கிடைக்காமற் போனால் அது நமது தோஷமல்ல. இரண்டுபேர்கள் பரீக்ஷைக்குப்போகிறார்கள். ஒருத்தன் ஸரியாய் வியாஸங்கம் செய்தான், மற்றவன் செய்யவேயில்லை. இவன் ஜயமடையாமல் போனால் யாருடைய தப்பு? காலத்தின் தோஷமா அல்லது கர்மத்தின் பலமோ? இந்த இரண்டுமல்ல. இவனுடைய குற்றமேதான். இரண்டுபேரும் ஸரியாய் வியாஸங்கம் செய்து பரீக்ஷையில் ஒருவன்மட்டும் ஜயித்து மற்றவன் தோற்றால் அப்பொழுதுதான் அதிருஷ்டம் காரணமாகிறதே தவிர மற்ற காலத்தில் இல்லை. துஸ்ஸஹவாஸத்தால் ஒருவன் கெட்டால் அதற்கு கலிகாலமா காரணம்?

ஸநகாதிகள் கலிகாலம் வரட்டும் வரட்டும் என்று பிரார்த்தனை செய்துகொண்டிருக்கிறார்கள். ஏன்? கலியுகத்தில் மேலேறுதல் வெகு சுலபம். சிக்கிரத்தில் பலன் கிடைத்துவிடுகிறது. எந்த பலமானது கிருதயுகத்தில் தியானத்தால் கிடைக்கின்றதோ, எந்த பலம் திரேதாயுகத்தில்

யஞ்யத்தால் கிடைக்கிறதோ, எது அர்ச்சனையால் துவாபரத்தில் கிடைக்கிறதோ அதேபலன் கலியுகத்தில் கேசவ சங்கீர்த்தனத்தால் கிடைக்கின்றது, என்று பெரியோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

ध्यायन्कृते यजन्यज्ञैस्त्रेतायां द्वापरेऽर्चयन् ।
यदाप्नोति तदाप்नोति कलौ सङ्कीर्त्य केशवम् ॥

அஷ்டமாதிரி பத்துவருஷம் செய்தால் என்ன பலமோ கிருதயுகத்தில், அது திரேதாயுகத்தில் ஒரு வருஷத்திலும், துவாபரயுகத்தில் ஒரு மாசத்திலும், கலியுகத்தில் ஒரு நாளிலும் கிடைக்கின்றது என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் கலி ஸாது, கலியுகம் மிகவும் நல்லது. நாம் ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு ஸ்ரீ கேசவ பஜனம் பண்ண வேண்டியது.

இதனால் ஸந்தியாவந்தனாதிகளை விட்டுவிடவேண்டியது, அல்லது விட்டுவிட்டாலும் தோஷமில்லை என்று அர்த்தமல்ல. பஜனம் பஜனம் என்றால் என்ன அர்த்தம். भज सेवायां பஜனம் என்றால் ஸேவைதானே. ஒரு ஸேவகன் யஜமானன் சொன்ன வேலையைச்செய்கிறதே இல்லை. ஆனால் தினம்பிரதி யஜமானனுடைய வீட்டுக்குப்போய் தர்சனம் செய்துகொண்டுவந்தால் அவனுக்கு பலன் கிடைக்குமோ? பலன் கிடைக்காமல்போவதுமல்லாமல் சிக்ஷைக்குப்பாத்திரமாவானல்லவா? நாம் ஸங்கீர்த்தனம் மட்டும் போதாது.

இந்தக் காலத்தில் ராஜபக்தியை விசேஷமாய்க்கொண்டாடுகிறார்கள். அதேகாரணமாய் இந்தக் காலத்திற்கு கலிதான் அரசன். ஆகையால் அவன் சொன்னபடி செய்துவிடுவோம், என்று சிலபேர் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

இந்த விஷயமாய் ஒரு சதை ஞாபகத்திற்கு வருகின்றது. ஒரு பிராம்மணன் நல்லவன், வெகு யோக்கியன், நல்ல சிஷ்டன். பாதசாரியாய் ஒரு சபைக்கு வந்துகொண்டிருந்தான். வெகு தாகமானதால் தீர்த்தத்தைத் தேடி எங்கு சுற்றியும் தேடியும் கிடைக்கவில்லை. இப்படியே சுற்றித்தேடி வருகையில் ஒரு தோட்டத்தில் அநேக தர்பூஜிப்பழங்கள் பழுத்துகிடந்தன ஆனால் தோட்டக்காரனைக் காணோம். சும்மா பறித்து எடுத்துக்கொள்ள இஷ்டப்படாமல் அந்தப் பழம் இருந்த இடத்தில் இரண்டணா போட்டுவிட்டு பழம் பறித்துத்தின்றுகொண்டிருக்கிற ஸமயத்தில் கலிபுருஷன் வந்து இவன் செய்ததைக்கண்டு ஆச்சர்யப்பட்டு "இதென்ன அவிவேகம்? இத்தனை பழங்களில் ஒன்று எடுத்தால் அவன் கண்டுபிடித்துவிடவா போகிறான்? இதற்காக என் வீணாய் இரண்டணாவை வைத்துவிட்டுப்போகிறாய்? எடுத்துப்போ" என்று சொன்னான். பிராம்மணன் சத்திபஸந்தன் ஆகையால் என்ன சொல்லியும் கேட்கவில்லை. பணத்தை வைத்துவிட்டே போய்விட்டான். பிராம்மணன் போய் சபைக்குள்ளே உட்கார்ந்துகொண்டு வாக்கியார்த்தம் சொல்லிக்கொண்டிருந்தான்.

கலிபுருஷன் விடுவானா அவனைச் சும்மா? அதே சமயத்தில் கலி பறயன் வேஷம் போட்டுக் கொண்டு, உள்ளே வாக்கியார்த்தம் செய்துக்கொண்டிருக்கும் பிராம்மணன் பறையன் என்றும், தனக்கு மாப்பிள்ளை என்றும் சொல்லி சாக்ஷியமாக அவன் அன்றய தினம் மத்தியானம் ஸாப்பிட்டது மாம்ஸம் என்றும், வேண்டுமானால் வமனம் கொடுத்துப் பார்த்தால் விசதமாகும் என்றும் சொன்னான்.

பிராம்மணனுக்கு மிகுந்த துக்கமுண்டாயிற்று. ஆகா! என்ன கலிப்பிரபாவம்! என்று யோஜித்தானாம்.

இந்தபாதிரி ஸர்வசுத்தமாய் ஒருவேளை இருக்க முடியாமல் இருக்கலாம். இருந்தாலும் இந்த 5000 வருஷத்துக்குள் அவ்வளவு கேடு வந்துவிடவில்லை. போகட்டும் கலிராஜ பக்திக்கே இவ்வளவு பிரபாவம் இருந்தால், ஜகத்ரக்ஷகனை ஸர்வேசுவரன்மேல் எவ்வளவு பக்தி இருக்கவேண்டும்? அந்த பக்தி எங்கே என்று நாம் கேட்கலாமல்லவா?

இது எல்லாம் நமக்கு சுகத்தைக் கொடுக்கமாட்டாது. வெறுமனே புத்தி இல்லாமல் ஏதோ லௌகிகமாய்த் தெரிந்துகொண்டு, பிராந்தியை ஸம்பாதித்துக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோமே தவிர வேறொன்றுமில்லை. சாஸ்திரத்தால் சுகம் வருமே தவிர, நம்ம புத்திப் பிரகாரம் நடப்பதென்பது துக்ககரமாய் முடிந்தாலும் முடியும்.

ஆகையால் வித்தை என்பது எது? தர்மத்தைத்தெரிவித்து, எது பரமசுகத்தைக் கொடுக்கின்றதோ அதுதான் வித்தை. ஏதோ உபஜீவனத்திற்காக லௌகிக வித்தையை அப்யாஸம் செய்துகொண்டோம் என்று திருப்தி அடையக் கூடாது. அந்த உபஜீவனம்கூடப்போய்விட்டது. ஏன் வீணான சிரமம் நமக்கு? எது சாச்வதமான சுகத்தைக் கொடுக்கக்கூடியதோ அந்த வித்தையை ஸம்பாதித்துக் கொண்டு நிரந்தரசுகத்தை அனுபவிக்கப் பாத்திரர்களாக, சாஸ்திரத்தை நம்பி, அதில் சொல்லியிருக்கிறபிரகாரம் நடந்தால் நிஸ்ஸந்தேஹமாய் சுகம் உண்டு என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டியது.



2009

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 11 | சப்பாதிப்பதை | ஸம்பாதிப்பதை |
| 2 | 15 | ஆஸ்திக்கயம் | ஆஸ்திக்யம் |
| 3 | 25 | वाकस्य | काकस्य |
| 5 | 23 | योनिमाद्येरन् | योनिमापद्येरन् |
| 8 | 21 | तयोज्ञाने | तयोर्ज्ञाने |
| ,, | 23 | शुचिर्विंवो | शुचिर्विंवो |
| [illegible] | ,, | मृदाश्रयः | मृदाश्रयः |
| 18 | 3 | नाशः | नाशयति |
| 20 | 20 | वनश्रेणिया | वनश्रेणिर्या |
| 23 | 8 | प्रमकरणं | प्रमाकरणं |
| 69 | 13 | तानान्तरेण | तानन्तरेण |
| 70 | 6 | हयान्याहुः | हयानाहुः |
| 72 | 15 | भीषादग्नि | भीषास्मादग्नि |
| 94 | 2 | பிராஞ்ஞி | பிராஞ்ஞி |
| 95 | 21 | வினயம் | விநயம் |
| 99 | 18 | भवन्त | भवन्ति |
| 102 | 13 | சைந்திய | சைத்திய |
| 112 | 9 | யாஜித்த | யாசித்த |
| ,, | 19 | कर्तव्य | कर्तव्यं |
| 115 | 5 | तस्या | तस्य |

